உ

ஸ்ரீ வாணீசகாயம்.

# கலைமகள்.

புதுவைக் கலைமகள் கழகத்தினின்றும் வெளிவரும்
மாதாந்தப் பத்திரிகை.

வித்தைவிரும்பு. கேள்விமுயல். வீடுபெறநில்.

வெண்டாமரை ச. | 1916-ம் ஆ நவம்பர், டிசம்பர் மீ | இதழ் கக — கஉ.

## இலௌகிகப் பகுதி.

### தமிழில் மேல்நாட்டுச் சாத்திரச் சொற்கள்.

இப்போது நம் கல்லூரிகளில் மேல்நாட்டுப் பூதசாத்திரங்களை நம் நாட்டு மொழியிலேயே நமது சிறுவர்கட்குக் கற்பிக்க வேண்டுமென்று சிலகாலமாகப் பல அறிஞர் பாடுபடுகின்றனர். அங்ஙனம் கற்பிப்பதால், நம் சிறுவர் முதலில் மேல்நாட்டு மொழியின் அறிவு பெறுவதற்காகச் செலவழிக்கப்படும் நீண்டகாலம் வீணாகாமல் அவர்கட்குச் சாத்திரப் பயிற்சியிலேயே பெரிதும் பயன்படும்.

அங்ஙனம் மேல்நாட்டுக் கலைகளைக் கற்பிப்பதற்கு நம் நாட்டு மொழியில் வேண்டிய சொற்கள் இல்லையென்று சிலர் வாதஞ்செய்கின்றனர். அவ்வாதம் சரியென்று நமக்குத் தோன்றவில்லை. சில மொழிகளிற்போலல்லாமல் தமிழில் ஒவ்வொரு பொருட்கும் ஒவ்வொரு கருத்தமைந்த எத்தனையோ சொற்கள் குவிந்து கிடக்கின்றன. எவ்வகைக் கருத்தையும் உள்ளபடி

தெரிவிக்கவல்ல சொற்கூட்டங்கள் கற்றுத் தேர்ந்த புலவர்கள் வாயினருகில் காத்துக்கொண்டுகிடக்கும்.

ஆனுல், மேல்நாட்டுச் சாத்திரச் சொற்களுக்கெல்லாம் அதே கருத்தமைந்த சொற்கள் தமிழிலுண்டா என்று கேட்கலாம். தமிழிலுள்ள சொற்களுக்கெல்லாம் அதே கருத்தமைந்த சொற்கள் அம்மொழியிலுண்டா என்று நாம் அவர்களைத் திருப்பிக் கேட்போம். ஒரு நாட்டில் வழக்கிலில்லாத பொருட்கள் பிறநாட்டினின்று வந்து புகுதல்கூடும். அத்தகைய பொருட்களைத் தெரிவிக்கும் சொற்கள் எம்மொழியிலும் எப்படியிருத்தல் கூடும்? ஒரு மொழியில் வழக்கிலில்லாத பொருட்களை எடுத்தாளவேண்டிவந்தால் அம்மொழியில் புதிய சொற்களை ஆக்கிக் கொள்ளல் வேண்டும். அதுதான் உலக வழக்கு. 'ஸைக்ள்' (Cycle) என்பது துவிசக்கர வண்டி யென்றும், 'மோட்டார்கார்' (Motorcar) என்பது தற்போக்கு வண்டி யென்றும், 'எலெக்ட்ரிஸிடி' (Electricity) என்பது மின்சார சத்தி யென்றும், 'ஸப்மரைன்' (Submarine) என்பது கீழ்நீர்க் கப்பல் என்றும் இன்னோன்ன பல பெயர்கள் நம் நாட்டில் இப்போது வழங்கப்படுகின்றன: அவைகளெல்லாம் நம்மவர் இப்போது ஆக்கிக்கொண்ட சொற்களேயன்றி வேறன்று. மேல்நாட்டிலே புதிது புதிதாகக் கண்டு பிடிக்கப்படும் பொருட்களுக்கெல்லாம் புதிது புதிதாகத்தானே சொற்கள் அமைக்கப்படுகின்றன. ஆதலின், எப்பொருளையும் எக்கருத்தையும் தெரிவிப்பதற்கு, புதிதாகச் சொற்களமைக்கும் ஆற்றல் நம் நாட்டுப் புலவர்களுக்கு உண்டு. இக் கருத்துப் பற்றியே தமிழுக்கென்று சாத்திரக் குழூஉக்குறிச் சொற்களை நிச்சயிக்க, சேலத்தில் "டமில் ஸயன்டிபிக் டெர்ம்ஸ் ஸொஸைடி" (Tamil Scientific Terms Society) என்ற தமிழ்ச் சாத்திரப் பரிபாடைச் சங்கம் ஒன்று இப்போது ஏற்பட்டிருப்பது கேட்கப் பெரிதும் களிப்புடைகின்றேம். அவர்கள் தொடங்கியிருக்கும் வேலை நம் நாட்டிற்குப் பெரிதும் நன்மை பயக்கக்கூடியதே.

'அச்சங்கத்தார் பெரிதும் கவனிக்கும்படி நாம் அவர்களை ஒன்று கேட்டுக்கொள்ளுகின்றோம். மேல்நாட்டுச் சாத்திரச்

சொற்களுக்குத் , தகுந்த சொற்களை நிச்சயிக்கத் தொடங்கிய அவர்கள், அச்சொற்களெல்லாம் கூடியவரையில் தமிழாகவே யிருக்கப் பார்க்கவேண்டும். வடமொழியில் வல்ல சிலர் தமிழ்ப் புலமையின்மையினாலே தமிழில் எளிதிற் கிடைக்கும் சொற்களை யும் எடுத்தாளத் தெரியாமல் வடசொற்களையே வலிந்திழுத்துப் புணர்த்துவது இக்காலத்தில் வழக்கமாயிருக்கின்றது. ஆதலின், மேல்நாட்டு மொழியிலும் நம் நாட்டு மொழியிலும் தேர்ச்சி பெற்றவர்களே இவ்வேலை செய்தற்குரியவர்கள். இவ்விரு மொழிக ளோடு வடமொழியும் வல்லவர்களும் இதற்குத் துணையாயிருத்தல் வேண்டும். இது அரிய பெரிய வேலையாதலின், அப்படிப்பட்ட பேரறிவு படைத்தவர்களையே அச்சங்கம் அங்கமாகப் பெற் றிருக்குமென்று நம்புகின்றேம்.

அச்சங்கத்திலிருந்து மாதப் பத்திரிகை ஒன்று வெளி யாகிறது. அதில் சாத்திரச் சொற்கள் சம்பந்தமான பல வியா சங்கள் பல அறிஞர்களால் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதப் படுகின்றன. அச்சங்கம் செய்யும் வேலையை அப்பத்திரிகை நன்றாக எடுத்துக் காட்டுகிறது. அப்பத்திரிகைக்குத் தமிழில் ஒரு பெயரில்லாதிருப்பது ஓர் குறையாகும். தேச நன்மைக்கென் றெழுந்த அப்பத்திரிகையை ஆதரிக்க நம் நாட்டினர் யாவரும் கடமைப்பட்டவர்களே.

நவம்பர் மாதம் வெளிவந்த அப்பத்திரிகையில் ஒரு நண்பர், தமிழில் சாத்திரப் பரிபாடையைப்பற்றி நன்றாக எழுது கின்றார். ஆனால்,

> "பிரதிபதங்கள் :— ஸ்ரீ காசி நாகரிப்ரசாரிணி சபையார் போட் டிருக்கும் சாஸ்த்ர அகராதியிலுள்ள சம்ஸ்க்ருத பதங்கள் அப் படியே தேசபாஷைக ளனைத்திலும் வழங்கவேண்டுமென்பது என்னுடைய கொள்கை"

என்று அவர் கூறுகின்றார். இக்கொள்கை சிறந்ததென்று நமக் குத் தோற்றவில்லை. இக்கொள்கைக்கும், ஆங்கிலச் சொற்களை அப்படியே எம்மொழியிலும் அமைக்கவேண்டுமென்று அரற்றும் சில பெரியோர் கொள்கைக்கும் வேற்றுமை அதிகமிராதென்பது எமது கொள்கை. நிற்க.

மேற்படி பத்திரிகையில், தமிழில் சாத்திரப் பரிபாடைகளை நிச்சயிக்கும் வகையில் மற்றொரு நண்பர், நம் தேச மொழிகளில் ஆங்கிலச் சொற்களை அப்படியே அமைத்துவிடவேண்டும் என்று கூறும் அழகைப் பார்ப்போம். அந் நண்பர் எழுதிய வியாசம் ஆங்கிலத்திலன்றித் தமிழில் எழுதப்பட்டிருக்குமானால் ஆங்கிலம் தெரியாத தமிழ் மக்கட்கெல்லாம் அவர் கருத்து நன்றாகத் தெரியக்கூடியதாயிருக்கும். ஆங்கில அறிவும் தமிழறிவும் ஒருங்குபடைத்தவர்கள்தானே இவ்வேலையில் புகுதல்வேண்டும். அப்படியிருந்தால் தமிழில் நூலெழுதவேண்டிய முறையைப் பற்றி அவர் ஆங்கிலத்தில் எழுதுவானேன். அவர் தமிழறிவின்றி ஆங்கில அறிவுமட்டும் படைத்தவராயிருந்தால் அவரது யோசனை நமக்குப் பயன்படாதென்று தள்ளிவிடுதல்வேண்டும். ஆயினும் அவர் கூறுவதைக் கவனிப்போம்.

இந்நாட்டில் பல்வேறு வகைப்பட்ட மொழிகள் பேசப்படுகின்றபடியினாலே தேச மொழிகளில் ஆங்கிலச் சொற்களை அப்படியே அமைத்துவிடுவது எளிதாயிருக்குமென்கின்றார். ஒவ்வொரு மொழியிலும் சாத்திரச் சொற்கள் அமைப்பது வருத்தமென்கின்றார். ஆங்கிலச் சொற்கள் அளவு கடந்திருப்பதால் அவ்வளவிற்கும் தேச மொழியில் சொற்கள் தேடுவது முடியாதகாரியமென்கின்றார். உயர்தரக் கல்வியெல்லாம் ஆங்கிலத்தில் கற்கவேண்டியிருப்பதால் கற்பவர்க்கு அது எளிதில் பயன்விளைக்குமென்கின்றார்.

நம் தேயமொழியில் இவர்க்குள்ள பற்றே பற்று! ஆங்கிலச் சொற்களைக் கலந்து தமிழின் அழகைக் குலைத்து அதனைக் குட்டிச்சுவராக்க நினைக்கின்றார்போலும்! இது தமிழர்களுக்கு எவ்வளவு அருவருப்பையும் வருத்தத்தையும் விளைக்குமென்பதை இவர் அறியாமற்போனது வியப்பு! ஆங்கிலத்தில் மட்டும் அறிவுபடைத்தவர்கட்கு, தேசமொழியில் சாத்திரச் சொற்களையமைப்பது வருத்தமாகத்தானிருக்கும். இருமொழியிலும் அறிவுபடைத்தவர்கட்கோ அது எளிதாகவே முடியும். அன்றியும் வருத்தப்படாமல் உலகில் எக்காரியந்தான் கைகூடும்? ஆங்கி

லத்தில் எவ்வளவு சொற்களிருந்தாலும் அவ்வளவுக்கும் தமிழ்ச் சொற்கள் புலமை நிரம்பியவரிடத்துக் கிடைக்கும் என்பதை முன்னரே விளக்கியிருக்கின்றோம். உயர்தரக் கல்வியை ஆங்கிலத்தில் கற்பவர்களுக்கு, தமிழில் இவர் அமைக்க நினைக்கும் ஆங்கிலச் சொற்கள் எத்துணை நன்மை பயக்குமோ நமக்குத் தெரியவில்லை. மேல்நாட்டுக் கலைகளைத் தேசமொழியிலேயே கற்பிக்கவேண்டுமென்பதை இவர் மறந்துவிடுகின்றார்போலும்! மேலும், மேல்நாட்டுச் சாத்திரச் சொற்கள் அவற்றின் கருத்தை மனதில் நன்கு பதியவைக்கின்றது என்கின்றார். அச்சொற்களுக்கு அவ்வாற்றல் எப்படி வந்தது? பன்முறையும் எடுத்தாண்ட பழக்கத்தினாலன்றோ? அத்தகைய பழக்கத்தால் தமிழ்ச் சொற்கள் அவ்வாற்றலை யடைதற்கு என்ன தடை?

இவர் கருத்துக்குத் திருத்தம் கொண்டுவந்திருக்கும் இன்னொரு நண்பரையும் இச்சமயம் மறக்கமுடியவில்லை. தமிழில் ஆங்கிலச் சொற்களை யமைப்பதற்கு ஒலிவேறுபாடமைய, தமிழெழுத்துக்களையே சில குறிவேறுபாடமையத் திருத்தவேண்டுமென்று அந் நண்பர் திருவாய் மலர்ந்தருள்கின்றார். அழகழகு! சாலவழகு! தமிழெழுத்துக்கள் ஏற்பட்டகாலத்தில் இத்தகைய பேரறிவுபடைத்த பெரியோர்கள் இல்லாமற்போனதுபற்றி வருத்தமடைகின்றேம். தமிழ்நாட்டிற்கும் தமிழ்மொழிக்கும் வேறு பகைவரும் வேண்டுமோ? இவ்வரிய பெரிய கருத்துக்களையெல்லாம் ஏற்கெனவே சில அறிஞர்கள் மறுத்திருக்கின்றார்களாதலின், இதுபற்றி யிப்போது நாம் அதிகம் பேசவேண்டுவதில்லை.

மறுபடியும் நாம் அச்சங்கத்தாரைக் கேட்டுக்கொள்வதென்னவென்றால், நம் தமிழ்மொழிக்குத் தீங்கு பயக்கும் இச் சிறிய கொள்கைகளையெல்லாம் ஒதுக்கி, ஆங்கிலத்திலும் தமிழிலும் வடமொழியிலும் பேரறிவுபடைத்த பெரியோர்களைக் கொண்டு, மேல்நாட்டுச் சாத்திரச் சொற்களுக்கு, கூடியவரையில் தமிழ்ச் சொற்களையே தேடல்வேண்டும். சில சொற்களுக்குப் பொருத்தமான தமிழ்ச் சொற்கள் எளிதில் கிடைப்பது அரிதாகி, அச் சொற்களின் கருத்தை நன்றாகத் தெரிவிப்பதும், தமிழில்

வந்து வழங்குவதுமான வடசொற்கள் இருந்தால் அவற்றையும் சேர்த்துக்கொள்ளல்வேண்டும். தமிழில் வந்து வழங்காத புதிய வடசொற்களைச் சேர்த்தலினும், தமிழிலேயே ஆக்கச் சொற்களை யமைத்துக்கொள்வது பல்வகையானும் நன்மை பயக்கும்.

பத்திராதிபன்.

---

## மருத்துவப் பெட்டி.

### விரோசன மிளகு.

கள்ளிமரத்தைத்துளைத்து, தேவையானமிளகை அதில் அடைத்து, அதேமரத்தின் துண்டினால் அத் துளையை மூடி வெட்டுவாய் தெரியாமல் செம்மண் சீலை சார்த்தி, மேலே புற்றுமண்கரைத்துப் பூசி, உக – நாள் சென்றபின் மேற்படி கவசங்களை நீக்கி மிளகை யெடுத்துக்கொண்டு, மலச்சிக்கல் மலபந்தம் இவைகளுக்கு, தேகத்திடமறிந்து க, உ, ந வரையிலும் தாம்பூலத்துடன் மென்று தின்னும்படி கொடுத்தால் நன்றாகப் பேதியாகும். பத்தியமில்லை. கறிகுப்புசாதம் ரொட்டி முதலியவை சாப்பிடலாம்.

இப்படியே இலவங்கத்தையும் செய்து உபயோகிக்கலாம்.

(மஞ். ஜகநாதநாயடு,
மைசூர் அரண்மனை சர்ஜன்.)

### இஞ்சி ஷர்பத்து.

இஞ்சி ரசத்தை இரண்டுமணிநேரம் அசையாமல் வைத்து, தெளிவான ரசத்தை இறுத்துக்கொண்டு அந்த எடைக்கு இரண்டத்தனை சர்க்கரை சேர்த்துக் கலக்கி அடுப்பேற்றிக் காய்ச்சி, மதுபாகத்தில் வடித்துவைத்துக்கொள்க. அளவு க அல்லது உ ரூபா நிறை கொடுக்கலாம். பித்தசாந்திசெய்யும், இரத்தக் கெடுதலை மாற்றும், பசிதீபனமுண்டாகும். எடைக் கெடை நீர் சேர்த்து உட்கொள்ளவேண்டும்.

(ஷை ஜகநாதநாயடு.)

### புழுவெட்டிற்கு மை.

பொரித்த வெண்காரம் ஒரு விராகனெடை யெடுத்து வெண்கலத் தகட்டில் வைத்து அதன்மேல் கையாந்தகரைச் சாறுவிட்டு இரும்புப் பாத்திரத்தினால் ந நாழிகை அரைத்து அதன்பிறகு கொஞ்சம் வெண்

ணெய் சேர்த்து, சங்கு அல்லது பாலாடையினுல் ௩ நாழிகை அரைத்து எடுத்து ஒரு சிமிழில் வைத்துக்கொண்டு, புழுவெட்டினுல் மயிர் உதிர்ந்த இடத்தில் ௫ – நாள் தடவினுல் மயிர் மறுபடியும் முளேக்கும்.

(ஐயாக்கண்ணுப்பிள்ளை,
தஞ்சை சமஸ்தான வைத்தியர்.)

கண்ணேய்ந்து மருந்து.

ஒருகோழிமுட்டையைத்தண்ணீரிற் போட்டுவேகவைத்தெடுத்து அதன் மேல்தோலேப்போக்கி அம் முட்டையைத் தலைமயிரினுல் சம பாகமாக இரண்டாகத் துண்டித்து அவைகளின் மத்திய பாகத்திலுள்ள மஞ்சட்கருவை அப்புறப் படுத்தி, ஒரு பாதி முட்டை வெள்ளைக் கருவில் சீனுக்கற்கண்டுத் துண்டுகளை நிரப்பி அதனை மற்றொரு பாகத்தைக் கொண்டு மூடி நன்ருகக்கட்டி ௨ அல்லது ௩ நாள் தொங்கவிட்டு வைத்திருக்க அதில் தைலம் இறங்கியிருக்கும். அத் தைலத்தை ஒரு குப்பியில் பத்திரப்படுத்திவைத்துக்கொண்டு,காலேயும்மாலேயும் வெள்ளிக் கம்பியினுல் அதைக் கண்ணுக்குத் தீட்டிவர, கண்படலம், சதைபடருதல், இரணம் முதலிவை நீங்கிச் சுகமுண்டாகும்.

(V. மௌனதரு ருத்ரமூர்த்தி ஆச்சாரியார்,
பழனிஸ்தலம்.)

இடுப்புவலி.

சூடன் அரை அவுன்சை ௩ அவுன்ஸ் தேங்கா யெண்ணெய் விட்டு நன்ருக அரைத்துச் சற்று வெதுப்பிக்கொண்டு தடவினுல் இடுப்பு வலிகள் நீங்கும். காலேயும் மாலேயும் பத்து அல்லது பதினைந்து நிமிஷ நேரம்வரை மேற்படி தைலத்தை முற்றும் நன்ருய்த் தேய்க்கவேண்டும்.

இடுப்பு வலிக்கு, கடை அபினை இரண்டு அவுன்ஸ் தேங்கா யெண்ணெயில் கலக்கி, தினம் ௨, ௩ தரம் கொஞ்சம் கொஞ்சம் எடுத்து நன்ருகத் தேய்க்கவும்; ஆனுல் வலியுள்ளவிடத்தில் சூடாவது புண்ணுவது முறிவாவது தோலுரிவாவது உண்டாயிருக்கில் மேற்படி தைலத்தை யிடக்கூடாது.

(EDWARD J. WARING.)

ஓர் மருத்துவன்.

# சற்புத்திரன் சஞ்சலம்.

## ஓர் சோகக் கதை.

(வெண்டாமரை ச, இதழ் அ—க, 169-ம் பக்கத் தொடர்ச்சி.)

### அத்தியாயம் 10.

**ஆசிரியனுரை:**— ஜனகராஜன் ரெயில் யாத்திரை — அவனது சொந்த ஊரிலேயே, அவன் ஏறியிருந்த ரெயில்வண்டி யறையில் ஒரு செட்டியார் தனது மனைவி இரண்டு குழந்தைகள் சகிதம் வந்தேறியது. செட்டியார் பெஜவாடாவுக்குத் தன் மாமனார் வீட்டுக்குச்செல்லுகிறார் — அவரோடு நமது கதாநாயகன் உரையாடல் — உல்லாசமான பிரயாணம். சென்னையில் செட்டியாரும் ஜனகராஜனும் வேறுரெயில் ஏறியது—பகல் ரெயில்வே கார்டு இவர்கள் ஒவ்வொருவரையும் பலகேள்விகள் கேட்டல். கடைசியாக ஜனகராஜன் நாகபுரம் சேர்ந்தமை — தனக்கு உத்தியோக மளித்த ஐரோப்பிய வர்த்தகாதிபதியைக் காணச்சென்றமை.

**கதாநாயகனுரை:**— "நீர்தானு ஜனகராஜன்?" என்ருர் துரை. "ஆமாம் நான்தான்" என்றேன் "எங்கே! நாங்கள் உமக்கு அனுப்பிய உத்தரவைக் காட்டும்" என்ருர். சய்டைப் பையிலிருந்து அதைச் சட்டென எடுத்துக்கொடுத்தேன். துரை சற்றுப் புன்னகைசெய்து "சரி உம்மோடுகூடவந்த ஆள் எங்கே?" என்ருர். "கூடவந்த ஆளா! யார்? என்னசொல்லுகிறீர்கள்? மன்னிக்கவேண்டும். திரும்பச்சொல்லுங்கள்" என்று ஆங்கில வழக்குப்படி கேட்டுத் திகைத்து நின்றேன். "சரிசரி சற்றுப் பொறுமையாக நின்றுகொண்டிரும்" என்று சிரித்துக்கொண்டே சொல்லிவிட்டுப் பேச்சுக் குழா யந்திரமாகிய டெலிபோனண்டை சென்ருர். மணியடித்தார். "ஹல்லோ! ஹல்லோ! போலீஸ் ஸ்டேஷன்" என்று கூவினர். உத்தரமாக மணியடித்தது. "ஹல்லோ யார் நீர்!" என்று துரை குழாய்க்குள் கூவினர். பதில் என்ன வந்ததோ! எனக்கு எப்படித்தெரியும்! "மீன் அகப்பட்டுவிட்டது. உடனே புறப்பட்டு வாருங்கள்" என்று சொல்லி மணியடித்துவிட்டு மீண்டும் தன் ஆசனத்துக்கு வந்துவிட்டார். நான் இவைகளின் அர்த்தம் சிறிதும் அறிந்துகொள்ள இயலாமல் நின்றுகொண்டே இருந்தேன். "நீர் என்ன பரீட்சைகளில் தேறியிருக்கிறீர்? உமது வயதென்ன? உமது தகப்பனருக்கு என்ன தொழில்?" என்றவாறு என்னை நோக்கிப் பலவித

கேள்விகளைக் கேட்டார் துரை. இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும் பொழுதே காற்சட்டை கைச்சட்டை சிவப்புத்தலைக்குட்டை தரித்த ஒரு உயரமான புருஷர் திடீரென எங்கள் முன்பு தோன்ற, துரை எழுந்து அவருக்குக் கைலாகுகொடுத்து ஒரு நாற்காலியில் வீற்றிருக்கச் செய்து தாமும் அமர்ந்தனர். புதிதாய் வந்தவர் என்னை உச்சிமுதல் உள்ளங் கால்வரை, இரண்டு மூன்று முறை அண்ணாந்து குனிந்து நோக்கினர். பின்பு, "அவள் எங்கே யிருக்கிறாள்? உண்மையைச்சொல்லும்" என்று ஒரு கொடிய பார்வைபார்த்துக் கூவினர். திகிலும் வியப்பும் கலந்து என் முகத்தின் நிறத்தையே மாற்றின. "யார்? எனக்கு ஒன்றுந் தெரிய வில்லையே" என்றேன். "ஒன்றுந் தெரியவில்லையா! சரி, எல்லாந் தெரி விக்கிறேன்" என்று தன் உதட்டைக் கடித்துக்கொண்டு தன் பாதரட் சைக் காலால் பூமியை உதைத்து 'ஹேய்' என்று கூவினர். ஒருபோலீஸ் சேவகன் நுழைந்தான். நாகபுரத்தில் வழங்கும் சுதேசபாஷையில் என்னவோசொல்லிப் பின்பு அந்தச் சிவப்புத்தலைக்குட்டை தரித்தவர் என்னை நோக்கி, "நான் யாரென்று உமக்குத்தெரியுமென்று நினைக்கி றேன், இருந்தாலும் சொல்லுகிறேன். நான் போலீஸ் ஸப்இன்ஸ்பெக்டர், நீர் இந்தச் சேவகனோடு போலீஸ் ஸ்டேஷனுக்குப்போம்" என்றார். இச் சமயம் எனக்குக் கோபம் பொங்கிவிட்டது. "நானா! போலீஸ் ஸ்டேஷனுக்கா! என்! காரணத்தைச் சொல்லுங்கள். (துரையைநோக்கி) ஐயா! நீங்களே பாருங்கள், இதுஎன்ன விந்தை! என்ன அக்கிரமம்!" என்று ஆத்திரத்தோடு கூறினேன். "நீரே போகிறீரா? அல்லது இழுத்துக்கொண்டுபோகச் செய்யட்டுமா!" என்றார். "காரணத்தைமாத் திரம் சொல்லுங்கள்" என்று பிடிவாதஞ்செய்தேன். இன்ஸ்பெக்டர் சேவகனுக்குக் கண்ணால் சமிக்கை செய்தார். அவன், தூண்டில்முள் இரையைக் கவ்விய மீனை இழுப்பதுபோல என் கையைப்பற்றி ஒரு இழுப்பு இழுத்தான். இனித் தடுப்பது உசிதமல்லவென்றெண்ணி, "ஆனால், என் பெட்டி! என் பெட்டி!" என்றேன். "பெட்டி வரும், போ" என்று சினந்து அதட்டினர் இன்ஸ்பெக்டர். துரை சிரித்தார்.

சேவகனும் நானும் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தோம். என் மண்டைமுழுவதும் எரிந்தெரிந்து சுழன்றது. போலீஸ் சேவகனோடு பேசி, என்னை ஸ்டேஷனுக்குக் கொணர்ந்த காரணத்தை அறிந்து கொள்ள ஆவல்கொண்டேன். ஆனால் அவ் வூர்ப் பாஷை தெரியவில்லை. அவனுக்கு ஆங்கிலந்தெரியவில்லை. என் மூளையையே ஆயிரங்கேள்விகள் கேட்டு அது பதினாயிரம் விதமான உத்தரங்கள் கூற உழற்சிக்கடலில் உருண்டேன். கடைசியாக நெடுநேரங் கழித்து என் நண்பர் இன்ஸ்

பெக்டர் வந்தார். என் பெட்டியையும் ஒருவன் கொணர்ந்து வைத்தான். இன்ஸ்பெக்டர் என்னை நோக்கிச் சாந்தமாகப் பேசலானார்.

"இங்கே பாரும் மிஸ்டர் ஜனகராஜ்! நீர் இனித் தப்புவித்துக் கொள்ளமுடியாது. அவளை எங்கே விட்டுவந்தீர் என்பதைச்சொல்லி விடும். நகைகள் எங்கே? பணத்தில் எவ்வளவு செலவுசெய்தீர்? எல்லா வற்றையும் உண்மையாகச் சொல்லிவிடும். இல்லாவிட்டால் உம்மை நிர்ப்பந்தப்படுத்தி உண்மையைப் பேசும்படி செய்வோம்."

"ஐயா! என்னை நிர்ப்பந்திக்காதேயுங்கள். பொறுமையாக விசாரி யுங்கள். நான் என்னவோ குற்றஞ்செய்திருப்பதாகக் கருதி என்னை இங்கே கொணர்ந்திருக்கிறீர்களென்று நினைக்கிறேன். நான் இருப்பது ஷண்முகபுரி. நீங்கள் என்னைச் சந்தித்த வர்த்தக சாலைத் தலைவர் எனக்கு ஒரு உத்தியோகங்கொடுத்தார். அதைப்பெற இங்கே வந்தேன். வேறொன்றும் எனக்குத் தெரியாது. நீங்கள் என்னை எப்படி நிர்ப்பந்தித் தாலும் இதுதான் உண்மை" என்றேன். "உமது பெட்டிச் சாவியைக் கொடும்" என்று அவர் அதட்டவே, சட்டைப்பையிலிருந்து அதை எடுத்துக்கொடுத்தேன். இன்ஸ்பெக்டர் பெட்டியைத்திறந்து அதி லிருந்தவற்றையெல்லாம் மிகக் கவனமாகப் பரிசோதித்தார். சில வஸ்திரங்கள், பத்திரிகைகள், புத்தகங்கள், கடிதங்கள், சொற்பரொக்கம் இவற்றைத் தவிர அதில் வேறொன்றுங் காணப்படவில்லை.

"நீர் வெகு சாமர்த்தியசாலி! பெட்டியிலும் ஒரு அணுவளவு துப்புக்கூடக்காணோம். இனி, சாவித்திரி என்ற பெயர்கூட உமக்கு கிரீக் பாஷையாயிருக்கிறது என்று சத்தியஞ் செய்வீர்போலும்."

என் காதைத்துளைத்து என் நெஞ்சிற் சுறுக்கெனப் பாய்ந்தன இம்மொழிகள். இதுவரையில் அந்த நெஞ்சம் யாதொரு கிளர்ச்சியு மற்றிருந்தது. எனது சிரத்திற்குள்ளேதான் பலபல எண்ணங்கள், பல பல் சலனங்கள், அடுக்கடுக்காக, மிகக் கசப்பாக, அதி வெப்பமாக, கடல் நீர்த்திரைபோல் சுருண்டு சுருண்டு பொங்கின. இப்பொழுது இதய மும் புண்ணாக நொந்தது.

"சாவித்திரியா! என்ன! சாவித்திரியா! சாவித்திரிக்கென்ன! சொல்லுங்களையா. தயைசெய்து சொல்லுங்கள். சாவித்திரிக்கென்ன!— அவளைக்காணோமா! — ஓ! அவளை நான் அழைத்துக்கொண்டு வந்து விட்டேனென்று என்னைப் பிடித்துவந்திருக்கிறீர்கள்? (இச்சமயம் என்னைமீறிப் புன்னகையும் என் இதழ்களைப் பீறிற்று.) ஐயா! உங்க ளுக்கு ஆயிரம் வந்தனம். என்னை எப்படி வேண்டுமென்றாலும்

நிர்ப்பந்தியுங்கள். சித்திரவதை செய்யுங்கள். சாவித்திரிக்கென்ன! விவரத்தையெல்லாம் சொல்லுங்கள்'' என்று ஒரே மூச்சாக வார்த்தைகளைச் சிதறிக் கெஞ்சினேன்.

என் பேச்சின் தன்மை, நான் நின்ற தோற்றம், என் முகத்தில் மாற்றம் இவைகளைக்கூர்ந்து கவனித்து இன்ஸ்பெக்டர் மௌனமாய் நின்றார். ''ஐயோ! ஒன்றுஞ் சொல்லமாட்டீர்களா? இவ்வளவுதானா நீங்கள் என்னிடம்வைத்த இரக்கம்! சரி, இனி என்னை என்னசெய்யப் போகிறீர்கள். என்! கைதுசெய்து இன்றைக்கே என்னை ஷண்முகபுரிக்கு அனுப்புங்கள். அங்கே போயாவது நான் சாவித்திரியின் கதியை அறிந்துகொள்ளுகிறேன். சீக்கிரம் அனுப்புங்கள்'' என்று சற்றுச் சீறிக் கூறினேன்.

அப்பால் இன்ஸ்பெக்டர் என்னை ஒரு விசிப்பலகைமீது உட்காரும்படி பணித்துத் தாமும் ஒரு நாற்காலியிலமர்ந்தார். சாவித்திரியைப் பற்றி, நான் அறிந்துள்ளவற்றையெல்லாம் சொல்லும்படி கட்டளையிட்டார். சாவித்திரியின பெற்றோர்களுக்கும் என் பெற்றோர்களுக்கும் நட்பு என்று தொடங்கி, சாவித்திரியின் திருப்பதிக் கலியாணம், தாலியறுத்த கலியாணம், அவள் மாமன், அவன் குணம், சாவித்திரியின் தந்தையின் மரணம் தாயின் மரணம், அவள் மாமனுக்கும் எனக்கும் விளைந்த மனஸ்தாபம், இரண்டு வருடங்களுக்கு அதிகமாக நான் அவள் வீட்டுக்குச் செல்லாதிருப்பது முதலிய எல்லாவற்றையும் கூடியவரையில் சுருக்கமாகவும் விவரமாகவும் கூறினேன். இவற்றைப் பொறுமையாகக் கேட்டுக்கொண்டபின்னர் இன்ஸ்பெக்டர் எழுந்தார். நான் போலீஸ் காவலிலேயே இருக்கவேண்டுமென்று விதித்துவிட்டு வேறொன்றுஞ் சொல்லாமல் வெளியே அகன்றனர்.

(தொடரும்.)

சு. அ. சுப்பராயப்பிள்ளை.

---

## சங்கு.

(காலஞ்சென்ற பண்டிதர்
மாகறல், கார்த்திகேய முதலியார் எழுதியது.)

சங்கென்பது நீர்வாழ் உயிர்கள் பலவற்றுள் ஒன்று. இதைத் தொல்காப்பியர் முதலிய தமிழ்நூலோர் ஈரறிவுயிர் என்று சொல்லியிருக்கி

ளூர்கள். அதாவது பரிசத்தை அறிகிற அறிவோடு சுவையை அறிகிற அறிவையும் உடையதென்பது. மற்றைக் கண்ணறிவும் மூக்கறிவும் செவியறிவும் அதற்கு இல்லையென்று கொள்ளவேண்டும்.

பிங்கல முதலிய தமிழ் நிகண்டுகளில். சங்கின் பெயரெல்லாஞ் சொல்லி, இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னியம் என்னும் பிரிவுகளும் சொல்லியிருக்கிறார்கள்.

ஆயிரம் சிப்பிகளின் நடுவில் இடம்புரிச்சங்கு இருக்கிறதென்றும், ஆயிரம் இடம்புரிச்சங்கின் நடுவில்வலம்புரிச்சங்கிருக்கிறதென்றும், ஆயிரம் வலம்புரிச்சங்கின் நடுவில் சலஞ்சலம் இருக்கிறதென்றும், ஆயிரம் சலஞ்சலத்தின் நடுவில் பாஞ்சசன்னியம் இருக்கிறதென்றும் விளக்கியிருக்கிறார்கள். சங்குகளில் முத்து உண்டாகிறதென்றும் சொல்லுகிறார்கள்.

முதல்முதல் உலகத்தில் ஓர் மொழியும் இல்லாதிருந்த காலத்தில், அம் முதன்மக்கள் கைக்குறி, கட்குறி, பொருட்குறி, ஒலிக்குறிகளால் விடயங்களை அறிந்தும் அறிவித்தும் வாழ்ந்துவந்தார்கள். ஒலிக்குறிக்குச் சங்கையும் மிகுதியாக உபயோகப்படுத்தி வந்தார்கள்.

ஊதுகிற ஓசைவேறுபாட்டினாலே விடயங்களை அறிந்து கொள்வர். அவ் ஊதுகிற ஓசைவேறுபாடுகள் பலவாகும். செவிடன் காதில் சங்கு ஊதினாற்போல என்னும் பழமொழியும் வழங்குகிறது. தாரை முதலியவற்றை ஊதினாற்போல என்று சொல்லாமல் சங்கு ஊதினாற்போல என்று சொல்வதால் அவ் வொலிக்குறி வழக்கு இருந்ததென்பது வலியுறுகின்றது. சங்கைச் சலபாத்திரமாகவும் உபயோகப் படுத்திவந்தனர். மொழி உண்டான பிறகும் சங்கின் ஒலிக்குறியைப் போர்க்களத்தில் மாத்திரம் மிகக் கையாடினர். பல பாத்திரங்கள் உண்டாயிருக்கிற இக் காலத்திலும் அது வைதிக பாத்திரமாக இருக்கிறது.

சங்காபிடேகம் சிறந்தது. ஞானோபதேசம் செய்யுங்கால் சங்கினால் தடவி உபதேசித்திருக்கிறார்கள். அதில் ஞான சம்பந்தமான ஓராற்றல் இருக்கிறதென்று யூகிக்கவேண்டியிருக்கிறது. இதைப்பற்றி ஐரோப்பியர் ஒருவர் சொன்னவைஎல்லாஞ் சரியே. ஐயங்காருக்கு அதனை மறுக்க வேறோர் வழி தோன்றாமையால், சங்கென்பது சம்ஸ்கிருத பதம், அது தமிழாகாது, தமிழில் சங்குக்குப் பதம் கிடையாது என்று சொன்னது மாத்திரம் ஞாயமாக இல்லை. தமிழில் சங்குக்குப்

பெயரில்லை யென்பதையும், சங்கு என்பது தமிழ்ச்சொல் அன்று என்பதையும் விளக்கிச் சாதிக்க வொண்ணாது.

பூர்வீகமக்கள் தம் கருத்தை ஊதி அறிவிக்கும்பொருட்டு எப்பொழுதும் தம் பக்கத்தே வைத்துக்கொண்டிருந்தபடியால் அதற்குச் சங்கமெனப் பெயர் வந்தது.

சங்கம் = பக்கம், சங்கு.

சங்கமென்பது முதலில் பக்கத்தையும் பிறகு சங்கையும் உணர்த்தியது. சங்கம் சங்கென்றாயிற்று. சங்கம் தோளுமாம். பக்கத்தே யிருப்பதென்பது பொருள்.

சங்கதாளம் = தோட்கோப்பு.

---

# பாரததேச ஔடதப் பிரயோகம்.

---

பூர்வகாலத்தில் இந்துக்கள் கல்வித் திறமையுடையவர்களா யிருந்தார்களென அறிஞர் கூறியுள்ளார். அவர்களுடைய ஔடதப் பிரயோக முறைகள் வடமொழியிலும் தென்மொழியிலும் பல உள்ளன.

வடமொழி நூற்கள் ஆரியர் பாரதபூமியின்கண் குடியேறின பிறகு எழுதப்பட்டனவெனச் சுருதிகளால் விளங்குகிறது.

(V. R. Kokatnur.)

பல்லாயிரம் வருடங்களுக்கு முன் கூறியுள்ள உப வேதங்களிலொன்றாகிய ஆயுள்வேதத்தின் சிறப்பை நம்மால் புகலவியலாது. நம் நாட்டுப் பெருமையை நாமே நவிலுதலைப் பார்க்கிலும், மேல்நாட்டுக் கல்வித் திறமைவாய்ந்தோர் பாரத நூற்களை ஆராய்ந்து நம் முன்னோர் கல்வியைப் புகழக்காண்பதே உசிதமெனக் கருதிப் பின்வரும் விடயங்களை எழுத முயன்றோம்.

வடமொழி நூற்களில் சாரகர், சுஸ்ருதர் இவ்விருவர்களா லியற்றப்பட்ட கிரந்தங்களே தற்போது விசேடமானவை. இவைகளில், சுஸ்ருதத்தில், அங்கவிவர சாத்திரமும் (Anatomy) சஸ்திர வைத்தியமும் (Surgery) சாரகத்தில், உரோக நிதானமும் (Diagnosis) வாகட விதியும் (Pharmacology) விடகுணசாரமும் (Toxicology) வைத்திய ரசாயன சாத்திரமும் (Medical chemistry) ஆகிய விடயங்கள் இயைந்மையாத விதமாக வரையப்பட்டிருக்கின்றன. டாக்டர் ஏ.யோர்நேக் என்பவர்

சொல்லுகிறார்: "இந்தியாவின் பண்டைநாள் ஆயுர்வேத பண்டிதர்கள் எழுதியுள்ள சாத்திரங்களில் அங்கவிவர நூற்றிறத்தை அறியும்புகின், நம்மவர் யாவரும் பிரமையடைவார்களென்பது திண்ணம். அந்நூற்களின் விரிவும், நுண்மையும், பன்னூற்றாண்டுகளுக்கு முன் அவர்கள் யூகித்தறிந்த வழிகளும், இலக்ஷணங்களும் நாம் பார்த்து வியப்படையத்தக்கனவே."

இதனால் நம் முன்னோர் சஸ்திர வைத்தியத்தில் தேர்ச்சியடைந்தவர்களெனத் தெரிகிறது. அவ்வைத்தியத்தைக் கற்க, சவத்தை அறுத்து உறுப்புகளனைத்தையும் சோதித்து, தசை, நரம்பு, எலும்புகள் யாவையும் எண்ணுடனமைத்திருக்கிறார்கள். உதாரணமாக, அகஸ்தியர் அபிராமி மெய்ஞ்ஞான நாடியில் காண்க.

"மூலத்தி லெழுபத்திராயிரம் நாடி முளைத்தெழுந்து வலைபோல முடிந்ததோடே, கோலமாய்ப் பதின்மூவா யிரநரம்புங் கோவையாய்ச் சூழ்ந்திருக்குங் கூட்டிற்குள்ளே........................" என்ற அரிய சொற்களைக் கண்ணாரக் காண்கிறோம். இவ்வித எண்கள் சவத்தை ஒழுங்குடன் சிதைத்துத் தீர்க்க சோதனை செய்யாமல் எழுதப்புகார்.

சிலகாலஞ் சென்றபின் சாதிபேத மேற்பட்ட தருணத்திற்றான் சஸ்திர வைத்தியம் பூரியர் தொழிலெனக் கருதிக் கைவிடப்பட்டிருக்கும். அதுமுதல் அச்சாத்திரம் மறைந்து இற்றைக்கு இந்துக்கள் சஸ்திர வைத்தியத்தில் திறமையற்றவரெனச் சொல்லச் சமயமாயிற்று.

டாக்டர் க்ளார்க் எழுதுகிறார்: "தற்கால வைத்தியர்கள் தம் முறை ஒளடதங்கள் யாவற்றையும் அகற்றி, சாரகாவின் முறைகளைக் கற்றால் பிணியாளிகளின் தொகை மிகக் குறையும்." (Practical Medicine Kokatnur.)

டாக்டர் ராய்ல் என்பவர் "இபோக்ராத் ஆயுர்வேத சாத்திரத்தை இந்தியாவினின்று கி. பி. 400 வருடங்களுக்குமுன் கிரகித்துக்கொண்டு போனாரென்று கூறுகிறார்.

டாக்டர் பார்தோலோமியு சொல்லுகிறார்: "சாரகநூலிற் கண்ட விடயத்தைப்போல் நான் தற்கால கிரந்தங்களில் ஒன்றையும் காணவில்லை."

டாக்டர் கேசல்மான் "நிகழ்கால நவீன மருந்துகளனைத்தும் பண்டைநாள் இந்துக்களின் முறைகளின் மறு உற்பத்தியேயன்றி வேறல்லவென்று சொல்லுகிறார்.

அஷ்டவர்க்கங்களாகப் பிரித்துள்ள ஆயுள்வேதத்தில் அகதந்திர மென்னும் விடநூண் சாரநூலில், இந்துக்கள் விடங்களை விருக்கவிடம், உலோகவிடம், விலங்குவிடமெனப் பிரித்திருக்கிறார்கள். ஜலம், பூமி, காற்று இவைகளிற் கலந்திருக்கும் நஞ்சுகளையும் கூறியுள்ளார். அவர்கள், ஊமத்தை (Datura stramonium) எட்டி (Strychnos nux vomica) நாபி (Aconit) இவைகளின் குணங்களை யறிந்து உபயோகித்திருக்கிறார்கள்.

பாரததேசத்தார் பூர்வத்திலேயே சர்ப்பவிடத்தை ஔடதமாக உபயோகித்தாரெனத் தெரிகிறது. சில வருடங்களுக்கு முன்தான் அது மேல்நாட்டு வாகடங்களில் காணப்படுகிறது.

ஐரோப்பியர் சர்ப்பவிடத்துக்கு மருந்து கண்டுபிடிக்கிறதற்கு முன் இந்துக்கள் சர்ப்பக் கடிக்கு ஔடதம் உபயோகித்தார்களென, பெரிய அலெக்ஸாண்டர் காலத்துச் சரித்திரபோதகர் ஒருவர் எழுதியுள்ளார்.

சுஸ்ருதர் 760 பூண்டுகளை ஓர்ந்து அவைகளின் குணபேதங்களறிந்து, 37 வர்க்கங்களாகப் பிரித்திருக்கிறார். முற்காலத்து ஆயுள்வேத பண்டிதர்கள் பூண்டுகளைப் பிரயோகிக்கிற காலங்களையும், அவைகளைப் பயிரிடவேண்டிய பக்குவங்களையும், சத்துக்கள் மிகுத்திருக்குந் தருணங்களையும், நில சம்பந்தங்களையும் அறிந்துள்ளார். அவைகளை அங்காகர்ஷணநாசினி (Antispasmodic) என்றும், விரோசனகாரி (Cathartic or purgative) என்றும் சில விடங்களில் பூண்டுகளின் இலக்ஷணங்களைச் சொல்லுகிறதுமன்றி, அவைகள் கிருமிநாசினி (Anthelmintic) சுரநிவாரிணி (Febrifuge) இரணகாரி (Caustic) என்றும் உரைத்திருக்கின்றனர்.

மருந்துகள் அட்டகுண முடைத்தானவைகளெனவும், ஆயுள் விருத்தியைத் தரவும், அங்கப் பிளவுகளைச் சேர்க்கவும், முகவசீகரத்தையுண்டாக்கவும், தினவை யடக்கவும், வாந்தியை யகற்றவும், மலசல நிறத்தை மாற்றவும் கூடுமென் றுரைத்துள்ளார்.

சுக்ர என்பவர் பூண்டுகளை, ஆகாரப் பூண்டுகள், ஆம்பிலபானீயப் பூண்டுகள், எண்ணெய் தரும் பூண்டுகள், சாயப் பூண்டுகள், பிசின் தரும் பூண்டுகள், சவுக்காரப் பூண்டுகள், விடப் பூண்டுகள், சர்ப்பவிட முறிவுப் பூண்டுகள், வாசனைப் பூண்டுகள் எனப் பதின்மூன்று பிரிவுகளேற்படுத்தினர். தற்காலத்திய ஆயுள்வேத பண்டிதர்களும் முன்னோர் முறைகளையே அநுசரித்து வருகிறார்கள். இந்துக்கள் பூண்டுகளைச் சுயரூப

மாகவே உபயோகித்திருக்கிறார்கள். அப்பூண்டுகளின் சத்தைப் பிரித்துச் சுத்திசெய்து பிரயோகித்ததில்லை.

அவர்களுடைய சாத்திரங்கள் யாவும் சுமார் 3000 வருடத்திய அநுபோகத்தால் வாகட முறைகளாகத் தொகுக்கப்பட்டன. இக்காலத்திலுள்ள ஔடதங்களில் நூற்றுக்கு எழுபது இந்துக்கள் ஔடத வாகட நூலில் காணலாமென மேல்நாட்டு வைத்தியர் கூறியுள்ளார். பாரததேசம் வாகடவிதியில் சிறப்புற்றிருப்பதுபோல் எத்தேசமுமில்லை.

(V. R. Kokatnur.)

இப்பூமியில் விளையும் ஓர் பூண்டின் விசித்திரமான குணங்கள் பின்வருமாறு காண்க:

குண்டுமணி.—இலைகள் இருமலுக்குக் கொடுப்பதுண்டு. வேரைக் குழந்தைகளுக்குக் கஷாயம்போட்டுக் கொடுக்கலாம். விதையோ கொடிய நஞ்சு. விதையை நசுக்காமலும், வேகவைத்தும் உட்கொண்டால் கெடுதியில்லையாம்.

வேலம்பிசின். —

முன்னோர் உபயோகம்: சிற்றாமணக்கெண்ணெயின் அருவருப்பான சுவையை மாற்ற வேலம்பிசினை உபயோகித்தார்கள்.

மேல்நாட்டார் உபயோகம்: வேலம்பிசின் தூள், சர்க்கரை, கிச்சிலிப்பூநீர், ஜலம் இவற்றைக் கலந்து விளக்கெண்ணெயுடன் சேர்ப்பதுண்டு.

ஆடாதோடை. —

மு. உ. க்ஷயரோகங்களுக்கும், மந்தாரகாசத்துக்கும் உபயோகித்தார்கள்.

மே. உ. Justicia adhatoda (Herail.)

இதின் சத்து வாசிசீன் என்று சொல்லப்படுகிறது. இலைகள் கபஹரகாரியாகவும், அங்காரஷண நாசினியாகவும் உபயோகிக்கலாம்.

பப்பளிச்செடி. —

மு. உ. மாமிசத்தை மிருதுவாக்கப் பப்பளிப்பாலையாவது, இலைகளையாவது உபயோகித்தார்கள்.

மே. உ. Carica papaya — பாலின் சத்தாகிய பப்பாயினை — மந்தஜீரண ரோகங்களுக்குக் கொடுக்கிறார்கள்.

**வேள்ளெருக்கன். —**

மு. உ. வமநகாரியாக (emetic) முறைச்சுரங்களுக்குக் கொடுத்தார்கள்.

மே. உ. Mudar - Calotropis gigantea (Herail) அதின் பட்டை போஷணகாரி (tonic) ஸ்வேதகாரி (diaphoretic) அதிக அளவுக்கு வமந காரி என்று சொல்லுகிறார்கள். குஷ்டம், ஆனைக்கால்வாதம், சீத ரக்த பேதி இவைகளுக்குப் பிரயோசனமாகும். இது உற்பத்தியாகும் தேசங்களில் மேக ரணங்களுக்குப் பிரயோகிக்கப்படுகிறது.

**வாசனைப்புல். —**

மு. உ. எண்ணெய் கீல்வாதத்துக்கும், விஷபேதிக்கும் உபயோகப்பட்டது.

மே. உ. Andropogon citratus (Herail) ரக்த வியாபனகாரி—வெந்நீர் ஊறற் பானியமாக உதவுகிறது. (Astier)

**நாவல்பழம். —**

மு. உ. மதுமூத்திர ரோகத்துக்குப் பிரயோகித்திருக்கிறார்கள்.

மே. உ. Syzygium jambolanum (Herail) நாவல்பழத்தின் விதையைச் சூரணித்து மதுமூத்திர ரோகிகளுக்குக் கொடுத்தால், 48 மணி நேரத்துக்குள் குணத்தைக் காணலாம். இலவங்கப்பட்டை, மிளகு, வாலேந்திரபோளம், குவாக் கிழங்கு, எலரிசி முதலிய வஸ்துக்களையும் முன்னோர் உபயோகித்தார்கள்.

மேற்கண்ட யாவும் வடமொழியிற் சொன்னவை.

தென்மொழி நூற்களிலுள்ள சில ஔடதங்களின் உபயோகம்:

**எருக்கன்.**— புலிப்பாணியார் சுரமாத்திரையில் சேர்த்திருக்கிறார். (வைத்தியம் 500 – பாட்டு 2. "வேப்பாகக் கல்வர்த்திலிட்டு விதமாக வெருக்கம்பாற் றன்னாலாட்டி.. ......")

**ஆடாதோடை.** — புலிப்பாணியார் சுரங்களுக்குக் கொடுத்திருக்கிறார்: (வைத்தியம் 500 – பாட்டு 2?8. "பாங்கான வாடாதோடை...")

**அறுகம்புல்.** — புலிப்பாணி மூத்திரவர்த்திநியாக உபயோகித்தார். (வைத்தியம் 500 – பாட்டு 298. "......தயவான வறுகன் வேர்........")

மே. உ. Agropyrum repens.

மூத்திரவர்த்தினி (Astier)

அநேகவிதப் பூண்டுவர்க்கங்களையும், உலோகங்களையும் முன்னோர் பண்டிதர்கள் உபயோகித்ததை இக்காலத்து மேல்நாட்டாரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். முன்னோர் திராவிடத்தில் எழுதிய சில புத்தகங்கள் இப்போதும் அச்சிற் பதிப்பிக்கப்பட்டுள்ளன. அவைகளி லடங்கிய முறைகளிற் சில சுருக்கமாகக் காணப்படுகின்றன. நிகழ்காலப் பண்டிதர்கள் கல்வித்திறமையால் அம்முறைகளின் உட்கருத்துக்களை அறிந்திருந்தும் முனிவர்கள் உரைத்த வண்ணம் எல்லாம் செய்துமுடிக்க இயலாமல் சிற்சில முறைகளையே கையாடி வருகின்றனர்.

இதன்றியும் சில விடயங்களை அருமையாகக் கற்றுணர்ந்தோர் தற்போதும் சிறுபான்மை இருந்தும் முறைகளைப் பிரசித்தப்படுத்தவில்லை. முன்னூற்களைக் கற்க வைத்தியனுக்கு முதலில் கல்வித் திறமை வேண்டும். பிறகு உரோக சாத்திரங் கற்று, வாகடவிதியும் கற்று, அகத்திய ருரைப்பதுபோல் குரு முறைகளையு மறிந்து, ஔடதங்களைத் தானே செய்யவேண்டியவனாகிறான். மேல்நாட்டார்போல் வைத்தியன் வேறு, வாகடங் கற்றோன் வேறாக இருப்பதைவிட முன்னோர் அமைத்த வழியே சிறப்புள்ளது. மருத்துவன், வைத்தியம் வாகடம் என்ற இருதரக் கல்வியையும் கற்பதற்கு அதிக சிரமம் வகிக்கவேண்டியவனாகிறான். இச்சிரமமில்லாமலே தற்காலத்தில் சில சுதேச வைத்தியர்கள் சிகிச்சை புரிவதையும் பார்க்கிறோம். பல்லாண்டாக நாட்டுச் சிறப்புக் குன்றியது போல் ஆயுள்வேதங் கற்றலும் மறைந்தது.

சிலர் ரோக குணங்களைக் கசடறக் கல்லாதும், ஔடத முறைகளை அறிஞரிடம் கற்றுணரச் சிரமப்படாதும் சுலபமாக மேல்நாட்டு ஔடதங்களை இந்நாட்டு முறைகளில் முடித்திருப்பதாகக் கூறித் திரிகின்றனர். நாம் மேல்நாட்டு வாகடவிதிகளைத் தழுவவொண்ணாதெனச் செப்பவில்லை. மேற்கல்வியுடனும், நம் நாட்டுக் கருவிகளை நம் தேகத்துக்குத் தக்கவாறு நாமே பயன்படுத்தக் கற்றல் உத்தமமாகும். நம்மிடத்தில் சாத்திரமும் அபாரம். கல்வி அறிஞரும் உளர். சுதேச ஆயுள் வேதங் கற்க இச்சையுடையோர், அவ்வேத ரகசியமறியக் கல்வியைப் பயின்று, ஆயுள்வேதத்தையுமறிந்து சிகிச்சை செய்யவேண்டும். அவ்வண்ணம் நடைபெற ஓர் வைத்தியக் கலாசாலையும், வாகடசாலையும் உண்டானால் நம் முன்னோர் சாத்திரம வழுவுறாது.

நடராஜன்.
(Officier de santé.)

# தருணீமணி.

## 9. வேலையின் கூலி.

(வெண்டாமரை ௪, இதழ் ௧௦, 209-ம் பக்கத் தொடர்ச்சி.)

பரபரப்புடன் கூடிய தளிர்க்கரங்களுடன் மாதவி சோமதத்தன் லிகிதத்தைப் பிரித்துப் பார்வையிட்டனள்.

"மாதவி! நானிறந்து நீ சுகிக்கவும் எண்ணியிருந்த மனோராச்சியத்தை விட்டொழி! நம்மிருவர்க்குமுள்ள சம்பந்தத்தை நான் நீதிசாகரர்க்கு வெளியிட்டுள்ளேன். நீதான் எனக்கு விஷம் கொடுத்தவள் என்பதை யவர் அறிவார்! இதைப் படிப்பதற்குள் உன்னைச் சில வீரர் வந்து கைது செய்வர். உன்னைச் சிறைச்சாலைக்குக் கொண்டேகுவர். நீயும் பாதைப்பட்டு உயிர்விடுவாய். உன் அவஸ்தையை நானும் வானத்திருந்து கண்டு களிப்பேன்! இட்டார்க்கிட்டபடி வினைப்பயனை ஊட்டுவிக்க இறைவன் ஒருவன் ஏகாந்தத்தே இருக்கின்றான். நான் பத்மினிக்கிட்ட விஷம் உன் கையால் எனக்கும், எனக்கிட்ட விஷம் பரமன் கையால் உனக்கும் வந்துசேரும். நான் தருணீமணிக் கிழைத்த தீங்குகளுக்கு மாறாக என் —"

இதைப் படித்து முடிக்குமுன் வாயிலில் இரு வீரர்கள் "மாதவி எங்கே! எங்கே மாதவி!" என்றார்ப்பரித்துக் கதவை யுடைக்கலானார்கள். மாதவியின் மனந் திகிலுற்றது. தானணிந்திருந்த ஒரே ஆடையுடன் தோட்டத்துப்புறத்திருந்த கதவைத் திறந்து வெளிச்சென்று நீதிசாகரர் என்னும் பிரபுவின் இல்லம் நாடினாள்.

"ஐயா! காப்பாற்றுங்கள்! —"

"நீ யார்? —"

"நான்தான் மாதவி!"

"சோமதத்தருக்குச் சகோதரி என்று சொல்லிச் சிறையுட் புகுந்து விஷம் கொடுத்தவளா? — வெளியே ஓடிவிடு — இல்லையேல் நான் உன்னை வீரர்வசம் ஒப்புவிக்க நேரும் —" எனக் கடிந்துரைத்தனர் நீதிசாகரர்.

மாதவி வீட்டைவிட்டு வெளிவந்தாள். இரவு சமீபித்ததால் கோட்டையின் கதவுகள் தாளிடப்பட்டன. "வேறுவிதம் தப்பித்துக் கொள்ள மார்க்கமில்லை அகழே கதி!" என்றான்.

அகழினை நெருங்கினுள். தன்னகத்தே பார்வையைச் செலுத்திய பாபியின்மீது சீற்றமுற்றதுபோல் இரைந்து சென்றது அகழ் நீர். "ஐயோ! நேற்று யாரேனும் என்னை நோக்கி நீ நாளையிறப்பாய் என்று சொல்லின் நான் அவரைப் பித்தர் எனக்கூறுவேன். இன்று நானே மரணத்தை விருப்புடன் தேடுகின்றேனே!" என்ருள்.

அகழின் அருகிற்சென்ருள். அதிற் குதிப்பதற்கோ மனமில்லை. இதற்குள் இரு வீரர் பேசிக்கொள்ளும் வசனங்கள் அவள் காதிற் பட்டன.

"அப்படியானல சோமதத்தர் சகோதரி இல்லையா அவள்?" என்ருன் ஒருவன். "இல்லை! மாதவியென்பாளாம் அவள்.— வீரர்கள் அவளைத் தேடிக்கொண்டிருக்கிருர்கள்" என்ருன் மற்றவ்ன்.

இனித் தாமதிப்பதில் பயனில்லை. மாதவி ஒரு பேரிரைச்சலுடன் அகழிற் குதித்துவிட்டாள். தர்மதேவதையின் பலியும் நிறைவேறியது!

... ... ... ... ... ... ... ...

அதேசமயத்தில் சுகுமாரனும், தெய்வநாயகத் தேவனும் பூங்காவிலுட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். சில நிமிஷங்களில் தருணீமணியும் அவ்விடம் வந்துசேர்ந்தாள். அவர்களுக்குத் தேவன் தன் சரிதையைச் சாற்றலாயினன்.

"என் தகப்பனர் விக்கிரமபுரத்தில் பெயர்போன முருகையசெட்டியார் என்பவர். என் பெயர் மாதவன். தேவன் என்பது புனைபெயர். எங்களுக் கருகாமையில் குப்புசாமி செட்டியார் என்ற ஒரு வியாபாரி இருந்தார். அவருக்கு ரஞ்சனி என்ெருரு புத்திரி. நாங்களிருவரும் பாலிய சிநேகிதர். காலத்தில் சிநேகம் முதிர்ந்து காதலாக மாறியது. எங்கள் பெற்ருேரும் எங்கள் மாதிரியைக்கண்டு மணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் யாவும் செய்வித்தார்கள். திடீரென்று குப்புசாமி செட்டியாருக்குக் கஷ்டம் நேர்ந்தது. அவர் கலங்கள் யாவும் கடலில் சிதறுண்டுபோயின. என் தகப்பனர் பணத்தின்மீதே நோக்கமானவராதலால் உடனே ஏற்பாடுகள் யாவற்றையும் நிறுத்திவிட்டு நான் அவர்கள் வீட்டிற்குப் போவதையும் நிறுத்தும்படி கட்டளையிட்டார். நான் உடனே ரஞ்சனியிடஞ் சென்று என் கஷ்டத்தைத் தெரிவித்து, அவளுக்கிஷ்டமானல் அக் குடும்பத்தாருடன் வேற்றூருக்கு ஓடிவிடுவதாகத் தெரிவித்தேன். அவள் சம்மதிக்கவில்லை. சில நாட்களுக்குப் பின் அவள் குடும்பத்தார் வேறூருக்குப் போய்விட்டதாக வறிந்தேன்.

ஆறுமாத காலமாயிற்று. என் தந்தை மாறுபாடாக வியாபாரஞ் செய்வதாகக் கேள்வியுற்று அவ்வூரரசன் எங்கள் சொத்துமுழுவதையும் அபகரித்துக்கொண்டான். சில வருஷங்களில் என் தந்தையும் காலஞ்சென்றார். நான் ஒரு பணக்கார வியாபாரியின் பெண்ணைக்கொண்டேன். இது பணத்திற்காகவே செய்துகொண்ட மணவினை. எங்களிருவருக்கும் சதா சண்டையும் சச்சரவுமாகவேயிருக்கும். நானும் வெறுப்புற்று என் காலத்தைச் சூதாடும் அரங்கத்திலும், கட்கடையிலுமே கழிப்பேன். வீட்டை விற்றுக் கடைசியாக இப்பொழுதிருக்கும் குடிசையை நாடினோம். வேறு பிழைக்கும் கதியில்லாமல் குடிசையின் ஓர் பாகத்தை வாடகைக்கும் விட்டோம். — ஒருநாள் என் மனைவி தன் வீட்டிற் குடிவந்த பெண்பிள்ளை அசௌக்கியமாயிருப்பதாயும் அவளுக்கு நான்கு வயதில் ஓர் பெண்குழந்தை இருப்பதாகவும் சொன்னாள். நான் உடனே அவ்விடம் ஓடினேன். மரணாவஸ்தையிலிருக்கும் ரஞ்சனியைக் கண்டேன். — ”

தேவன் கண்ணீருகுக்கலாயினன்.

“ ரஞ்சனியை என்மடியில் எடுத்து வைத்துக்கொண்டு என்னாற் கூடிய சிகிச்சைகளை நான் செய்தேன். இதற்குள் என் மனைவி ஓடிவந்து என்னைக்கண்டு சண்டையிடவாரம்பித்தாள். நான் ஓர் தடிகொண்டு அவளையும் அவள் மகனையும் சாலப்புடைத்தேன். அதனால் என் மனைவி இறந்தனள். என் மகன் கூனன் ஆயினன். — நிற்க, ரஞ்சனி சீக்கிரம் காலன்வசம் ஆயினள். — அவள் கடைசிக் கடிதங்கள் ஒன்று கோபிகா தேவருக்கும் மற்றது கருணாகரர்க்கும் விலாசமிடப்பட்டிருந்தது. இவ் விருவரையும் தேடிப்பார்த்தேன் பயன்படவில்லை. கடைசியாக ரஞ்சனியின் குழந்தையை நானே என் குழந்தைபோற்கொண்டேன். அவளே தருணீமணி! — ”

இதற்குள் வீரன் ஒருவன் சுகுமாரனை அணுகி ஓர் லிகிதத்தை அவன் வசமளித்து வந்தித்து நின்றான்.

“தர்மமே உருக்கொண்ட சுகுமாரரே! எமதர்மராஜன் சபையில் தண்டனை பெறப்போகும் ஒருவன் உங்களை வேண்டுவது : —

“ நான் செய்தவை யாவற்றையும் மன்னிக்கவும். தருணீமணி என்பவள் உங்களுக்குச் சகோதரியாவள் என்பதைச் சில நாட்களுக்கு முன்னறிந்தேன். ‘ரஞ்சனி’ என்னும் பெயர்கொண்ட தருணீமணியின் தாயாரை உங்கள் தகப்பனார் இரண்டாந்தாரமாகக்கொண்டு, ஓர் தடவை கோபிகாதேவருடன் அவள் வண்டியிற் செல்வதுகண்டு காரணத்தைத

விசாரிக்காமலே, அவளை நீக்கிவிட்டார். கோபிகாதேவர் ரஞ்சனியின் சகோதரர். —

"நான் தருணிக்கிழைத்த அபகாரத்திற்குப்பதிலாக என் பொருள் யாவற்றையும் அவள்மீது எழுதிவைத்துள்ளேன்.

"நல்லோரை ரக்ஷிக்க இறைவன் உளன்.

தங்கள்
சோமதத்தன். —"

R. வாசுதேவ சர்மா.

---

## அரிசியின் குணகுணங்கள்.

பூசா பயிர்த்தொழில் வித்தியாசாலையில் மிஸ்டர் ஜதீந்திரனுத் ஸேன் என்பவர் அரிசியைப்பற்றிச் செய்த சில விசாரணைகள் ஜனங்களுக்கு மிகவும் நன்மையைக் கொடுக்கக்கூடிய விஷயமாயிருக்கின்றன. அரிசியிலிருந்து தவிட்டை வேறுபடுத்துவதினுல் அரிசியின் குணங்கள் குறைந்துவிடுகின்றன. அரிசியிலிருந்து தவிட்டைப் பிரித்துவிட்டு அரிசியைச் சுத்த வெண்மையாகுமாறு தீட்டிவிடுகிறதினுல் அரிசியிலிருக்கிற எண்ணெய் வஸ்து பாதி குறைந்துவிடுகிறது. அல்புமினுய்டஸ் என்ற வஸ்து கொஞ்சம் மங்கிவிடுகிறது. அரிசியிலுள்ள ஒரு நார் சத்து காலபங்கும், உலோக சத்துக்கள் பாதியும் குறைந்துவிடுகின்றன. தீட்டியும் கழுவியும்விட்ட பிற்பாடு, அரிசியிலிருந்து நீக்கப்பட்ட வஸ்துக்கள் அரிசியைப் பார்க்கிலும் புஷ்டியுடையனவாயிருக்கின்றன. வைத்திய சாஸ்திரப்பிரகாரம் இவ்வாறு செய்வது மிகவும் தவறும். தவிட்டிலும் வெண்மையான அரிசியைச் சேர்த்துச் சாப்பிட்டால் பெரிபெரி என்ற ஒரு நோய் வருகிறதில்லையென்று 1897-ம் வருஷத்தில் எய்க்மன் என்ற ஒருவர் கண்டுபிடித்தார். பாஸ்பரிக் ஆஸிட் என்ற வஸ்து அரிசியில் குறையக்குறைய பெரிபெரி என்ற வியாதி அதிகரிக்கிறதென்று டாக்டர்கள் அபிப்பிராயப்படுகின்ருர்கள். நூற்றுக்கு 0.47 பாஸ்பரிக் ஆஸிட்டையுடைய அரிசி கோழிகளுக்குச் சுகமான ஆகாரமாயிருக்க, அதே வஸ்து நூற்றுக்கு 0.28 ஐயுடைய அரிசி மனிதர்களுக்கு நோயையுண்டாக்கக்கூடிய ஆகாரமாயிருக்கின்றது. தவிட்டைப்போக்காத அரிசி தேகத்துக்குச் சுகத்லைக் கொடுக்கும். தவிடு நீங்கின அரிசி சாப்பிடுவதற்கு யோக்கியமில்லையென்று மிஸ்டர் சேன் சொல்லுகிருர். அவ்வித

அரிசியை மாத்திரம் நாம் சாப்பிட்டு வருவோமாயின் எத்தனையோ சுகவீனத்தைக் கொடுக்கும். ஆனால் நாம் மாம்ஸம், மரக்கறி முதலியவை களை அன்னத்துடன் சேர்த்து அருந்துவதினால் அநேக ரோய்கள் நம்மைப் பீடிக்காமலிருக்கின்றன. ஆயினும் நாம் எப்பொழுதும் அவ் விதஞ் செய்வது உசிதமல்ல. அரிசியைப் பால்போல் கழுவி அதிலுண் டான தவிட்டைப் போக்கி, குருணை அஃதாவது சிதறிப்போன அரிசி யை நீக்கி, அரிசியைச் சமைத்து, சாதத்திலிருந்து கஞ்சியை வியர்த் தஞ்செய்து அச்சாதத்தைச் சாப்பிடுவது உசிதமல்லவென்று கேல்னர் என்பவர் வற்புறுத்துகிறார். நாம் நாவுக்கு ருசியைக் கவனிக்கிறோமே யொழிய அரிசியிலுண்டான நல்ல வஸ்துக்கள் போய்விடுகின்றனவே யென்று யோசிக்கிறதில்லை. சில இடங்களில் அரிசியை வெண்மை யாகச் செய்யச் சுண்ணும்பை யுபயோகிக்கிறார்கள். அது மிகவும் தீமை யைக் கொடுக்கின்றது. சிலவிடங்களில் அரிசியைக் கழுவின தண்ணீ ரையும் கஞ்சியையும் மாட்டுத்தொட்டியில் விட்டுக் கால்நடைகளுக்குக் கொடுக்கின்றார்கள். ஆனால் அவ்விதம் எல்லோரும் செய்கிறதில்லை. சுண்ணும்பினால் வெண்மையாக்கின அரிசியை உபயோகப்படுத்தாமல், அரிசியிலுள்ள தவிட்டின் சத்தை நீக்காமல் கஞ்சியுடன் சாதத்தைப் பொங்கிச் சாப்பிடுவதே வைத்திய சாஸ்திரத்திற்குப் பொருத்தமாம்.

(சுதேச பரிபாலினி.)

---

## பிரகிருதி சாத்திரம்.

### நான்காம் பாடம்.

(வெண்டாமரை ௪, இதழ் அ — ௧, 183-ம் பக்கத் தொடர்ச்சி.)

மூலங்கள், மிசிரங்கள், சக்கியங்கள். உலகில் இயங்கும் ஒவ் வொரு பொருளும் கலப்பற்ற தனிப்பொருளா அல்லது இரண்டு அல்லது அதிகப் பொருள்களின் கலப்பினால் அமைந்ததா என்பனவாதிய விடயங்களை ஆராய்வது இரசாயன சாத்திரத்தைச் சார்ந்த வேலையென்று ஆரம்ப பாடத்திற் கூறியிருக்கிறோம். இயற்கையின் இயக்கங்களை ஒருவாறு பாகுபாடுசெய்து, இரசாயன சாத்திரம், பிரகிருதி சாத்திரம், பிராணி சாத்திரம், சரீர சாத்திரம் என்றவாறு பல தனித்தனி நூல்கள் அமைக்க அறிவுடையார் ஏற்பாடுசெய்திருப்பினும் அப்பாகுபாட்டை முற்றும் கண்டிப்பாய் அநுசரிக்க இயற்கை இடங்கொடுப்பதில்லை.

பூமியின் உட்புற ஆக்கம் அல்லது அமைப்பைப்பற்றிக் கூறுவது ககோள சாத்திரம். ஆனால், ஒரு ககோள சாத்திரி சில பாறைகளாகிய பிருதிவியைப்பற்றி (பிருதிவி-மண்) ஆராய்ச்சி செய்யும்பொழுது, அவற்றில் பிராணி சடலப் பொருள்களும் தாவர சடலப் பொருள்களும் (பூமியிலிருந்து முளைத்து வளரும் மரம் செடி முதலியவை தாவரப் பொருள்கள்) இருப்பதை அறிகின்றார். ஆகையால் அன்னோர்க்குத் தமது ககோள சாத்திர ஆராய்ச்சியில் பிராணிசாத்திரம் தாவரசாத்திரம் இவைகளில் சிறிது ஞானம் வேண்டியதாகத்தானிருக்கிறது. அவ்வாறே நமது பிரகிருதி சாத்திரத்தைச்சார்ந்த சில விடயங்களை விளக்குவதற்காக இரசாயன சாத்திர சம்பந்தமான சில விடயங்களை அறியவேண்டியதும் அத்தியாவசியகமாக இருக்கிறது. பொருளின் ஒரு இலக்கணமாகிய பகுபடுதன்மையைப்பற்றிக் கூறும்பொழுது, ஒவ்வொரு பொருளும் பரமாணுக்கள் என்னப்படும் இனிப் பகுக்கமுடியாத மிகச் சிறிய துகள்களால் ஆக்கப்பட்டிருக்கின்றனவென்றோம். எனெனில், அணுதான் இரசாயன சாத்திர சம்பந்தமான சில நிகழ்ச்சிகளுக்குச் சரியாகக் காரணங் காட்டக்கூடிய கொள்கை என்று கூறி, அந்த இரசாயன நிகழ்ச்சிகளை எடுத்து விளக்குவது மிக விரியுமென விடுத்தோம். ஆனால் நமது பிரகிருதி சாத்திரத்தில் அவசியம் அறியவேண்டிய 'அணு' என்ற பரிபாடைப்பதத்தை விளக்குவதற்காக, முதன்முதல் மூலங்கள், மிசிரங்கள், சக்கியங்கள் என்ற இரசாயன சாத்திரப் பரிபாடைப் பதங்களைப்பற்றிச் சொல்லவேண்டியதிருக்கிறது.

உலகில் இயங்கும் சகல பொருள்களின் ஆக்கம் அல்லது அமைப்பு, சுமார் எண்பது பொருட்களிலேயே அடங்கும் என்று இரசாயன சாத்திரம் சாற்றுகிறது. அஃதாவது, தமிழ்மொழியிலுள்ள சொற்களெல்லாம் உயிர் பன்னிரண்டு, மெய் பதினெட்டு, ஆய்தம் *

* சிலவிடத்து உயிர்போலவும் சிலவிடத்து மெய்போலவும் உயிருமாகாமல் மெய்யுமாகாமல் வரும் ஆய்த எழுத்தை, இலக்கணக் கூற்றுக்கு மாறாக நாம் முதலெழுத்தென மொழிந்ததற்காக இலக்கணம் வல்லார் நம்மீது குறைகூறவேண்டா. ஈண்டுத் திருட்டாந்தத்திற்காக, பிற எழுத்துக்களால் ஆக்கப்படாத எழுத்துக்களை முதலெழுத்தெனக் கொண்டு அவற்றில் ஆய்தத்தையும் உட்படுத்தினோம். உலகிலுள்ள பொருள்களெல்லாம் சுமார் 80 பொருள்களிற்றானா அடங்கும்! என்ன வியப்பு! என்று மலைவு தோற்றாதவாறு, 80 பொருள்களாலேயே சகல பொருள்களும் ஆக்கப்பட்டிருக்கும் விதத்தைத் தெளிவாக விளக்கும்பொருட்டு, ஆயிரக்

ஒன்றும் ஆகிய 31 முதல் எழுத்துக்களாலேயே ஆக்கப்பட்டிருப்பது போல உலகிலுள்ள சகல பொருள்களும் சுமார் 80 † பொருள்களாலேயே ஆக்கப்பட்டிருக்கின்றன. ஆ, ஈ, ஊ (ஆ — பசு. ஊ — உணவு) என்பனவாகிய எழுத்துக்கள் ஓரெழுத்தொருமொழிகளாகவும், மற்ற மொழிகளெல்லாம் இரண்டு அல்லது அதிக எழுத்துக்களின் சேர்க்கையினால் ஆக்கப்பெற்ற மொழிகளாகவும், பாஷையில் வழங்குவதுபோல, இயற்கை யுலகில் சகல பொருள்களும் முற்கூறிய சுமார் 80 பொருள்களிற் சிலவாகிய கலப்பற்ற தனித்தனிப் பொருள்களாகவாவது, அல்லது அந்த எண்பதில் இரண்டு அல்லது அதிகமான பொருள்களின் சேர்க்கையால் ஆக்கப்பெற்ற கலப்புப் பொருட்களாகவாவது இருக்கின்றன.

கலப்பற்ற தனிப் பொருள்களுக்குத்தான், மூலப்பொருள்கள் அல்லது சுருக்கமாக மூலங்கள் என்று பெயர். இரண்டு அல்லது அதிகமான மூலங்களின் கலப்பினாலாகிய பொருள்களை மிசிரப் பொருள்கள் அல்லது மிசிரங்கள் என்றும் சக்கியங்கள் அல்லது சக்கியப் பொருள்கள் என்றும் அழைக்கிறோம். இனி மிசிரங்களுக்கும் சக்கியங்களுக்கும் என்ன வேறுபாடு என்பதைக் கவனிப்போம்.

பாதரசம் ஆகிய திரவப்பொருளை ஒரு பாத்திரத்தில் வைத்துச் சூடேற்றினால் திரவமான பாதரசம் சிறிது சிறிதாக ஒரு சிவப்பான புதிய திடபதார்த்தமாக மாறுகிறது. முதன்முதலிருந்த பாதரசத்தின் நிறையையும் பின்னர்த் தோன்றிய சிவப்புப் பதார்த்தத்தின் நிறையையும் திட்டமாகக் கணக்கிட்டால், இரண்டாவது தோன்றிய பதார்த்தத்தின் நிறை முதன்முதல் எடுத்துக்கொண்ட பாதரசத்தின் நிறையை விட அதிகமாகவேயிருக்கும். ஆகையால் பாதரசத்தோடு வேறொரு பொருள் கலந்து சிவப்புப் பதார்த்தம் உண்டாயிற்று என்று ஏற்படுகின்றது. அந்த வேறொரு பொருளாவது நம்மைச் சுற்றியுள்ள சாதாரண வாயுவிலுள்ள பிராணவாயு அல்லது அமலஜனம் என்ற ஓர்வகை வாயுவே.

---

கணக்கான தமிழ்ப் பதங்கள் 31 முதல் எழுத்துக்களால் ஆக்கப்பட்டிருப்பதுபோல என்று திருட்டாந்தம் காட்டினோமேயன்றி, இலக்கணத்தைச்சார்ந்த யாதொரு அபிப்பிராயத்தையும் வெளியிட வந்தோமில்லை என்று அறிவாராக.

† கலப்பற்ற தனிப் பொருள்கள் 77 என்றே நெடுங்காலமாகக் கொண்டிருந்தார்கள். ஆனால் வேறு சில புதிய பொருள்களும் இயற்கையுலகில் இருப்பதாக மிகச் சமீபகாலத்தில் செய்யப்பட்ட பரீட்சைகளால் அறியப்பட்டிருப்பதால் சுமார் 80 கலப்பற்ற பொருள்கள் என்றோம்.

இந்த வாயுவும் பாதரசமும் கலந்ததில் நாம் கவனிக்கவேண்டியவை யாவன :— இரண்டின் கலப்பினால் உண்டாகிய சிவப்புப் பொருள் அந்த இரண்டினின்றும் முற்றும் வேறுபட்டதாயிருக்கின்றது. அந்த இரண்டின் இலக்கணங்கள் இப்புதிய பொருளுக்குக் கிடையவே கிடையாது. பாதரசம் பிராணவாயு ஆகிய இரண்டு மூலப்பொருள்களும் வேறு வேறு பொருளாயிருப்பதுபோல அவைகளின் சேர்க்கையாலான புதிய பொருளும் ஒரு மூன்றாவது வேறு பொருளாகிறது. ஆனால் இந்த மூன்றாவது புதிய பொருளை இரசாயன சாஸ்திரம் கூறும் மார்க்கத்தால் மீண்டும், இரசம் பிராணவாயு என்ற இரண்டு பொருள்களாகப் பிரித்துவிடலாம். இம்மாதிரி இரண்டு அல்லது அதிகமான பொருள்கள், அவற்றினின்று முற்றும் வேறுபட்ட புதிய பொருள் உண்டாகும்படி கலப்பதற்கு இரசாயன சம்யோகம் அல்லது சம்யோகம் என்று பெயர். இந்த இரசாயன சம்யோகத்தாலுண்டாகும் பொருட்கள்தான் சக்கியப் பொருள்கள் அல்லது சக்கியங்கள். ஒரு சக்கியப்பொருளில் சம்யோகப்பட்டுள்ள பொருள்களைப் பிரிப்பதற்கு இரசாயன சம்யோகச் சிதைவு அல்லது சம்யோகச் சிதைவு என்று பெயர். இவ்வாறு சம்யோகச் சிதைவினால், இலக்கணங்களில் வேறுபட்ட வெவ்வேறு பொருட்களாகப் பிரிக்கக்கூடிய பொருட்கள் இயற்கையுலகில் இயங்குகின்றன. அவைகளும் சக்கியங்களே. சக்கியங்கள் இரண்டு அல்லது அதிக பொருட்கள் சம்யோகப்பட்டுத் தான் எப்பொழுதும் புதிதாக உண்டாக வேண்டுமென்பதில்லை. இயற்கையிலேயே மூலப்பொருள்களும் இருக்கின்றன, சக்கியப் பொருள்களும் இருக்கின்றன. மற்றொரு விடயம் நாம் கவனித்துக்கொள்ளவேண்டும். அதாவது, சம்யோகம் நிகழ்வதற்குச் சூடு வேண்டும். அல்லது சம்யோகம் நிகழும்பொழுது சூடு உண்டாகின்றது. பாதரசம் பிராணவாயுவோடு சம்யோகப்படுவதற்குச் சூடு வேண்டியிருந்தது. சுண்ணாம்புக்காளவாயில் சுடப்பெற்ற கிளிஞ்சல் சுண்ணாம்பில் தண்ணீர் வார்த்தால் சூடு உண்டாகின்றது. இதற்குக் காரணம் சுட்ட கிளிஞ்சலுக்கும் தண்ணீருக்கும் சம்யோகம் நிகழ்வதே. இந்தச் சம்யோகத்தால் உண்டாகும் பொருள் சுட்ட கிளிஞ்சலினின்றும், தண்ணீரினின்றும் வேறுபட்ட தாம்பூலச் சுண்ணாம்பு. நாம் அலங்கரிக்க உதவும் சுண்ணாம்பு. அடுப்புக்கரித்தூளையும் சர்க்கரையையும் கலந்தால் யாதொரு சூடும் உண்டாவதில்லை. அந்தக் கலப்புத்தூளில் கரித்தூளின் தன்மையுமிருக்கும். சர்க்கரையின் தன்மையுமிருக்கும். கலப்புத்தூள், கரி, சர்க்கரை ஆகிய இரண்டினின்று முற்றும் வேறுபட்ட ஒரு பொருளாகாது. ஆகையால் இந்தச் சேர்க்கை சம்யோகமாகாது. இந்தச் சேர்க்

கையைச் சாதாரணக் கலப்பு என்று நான் சொல்லவேண்டும். இந்தக் கலப்புக்குக் கரி, சர்க்கரை மிசிரம் என்று பெயர். நம்மைச் சுற்றியுள்ள சாதாரண வாயு இரண்டு மூன்று விதவாயுக்களின் மிசிரமே. மூலங்கள், சக்கியங்கள், மிசிரங்கள் என்பவைகளின் வேறுபாடுகளைப்பற்றி இன்னும் அதிகமாக விவரிப்பது நமது பிரகிருதி சாத்திரத்தில் அவசியமல்ல.

## தமிழ் தழைக்கிறதா?

பாஷாபிமானம் இல்லாதார் பதர். பாஷை என்பது தாய்ப் பாஷையைக் குறிக்கின்றது. தன் சொந்தத் தாய்ப் பாஷையில் அபிமானமில்லாதார் சமூகத்திற் சேர்க்கத்தகாத பதர். சமூகம் அவர்களை வெறுக்கவும் இகழவும் கடமைப்பட்டிருக்கிறது. அவ்வாறு செய்யாது அன்னோரிடம் சற்றுக் கண்ணோட்டமாயிருந்துவிடிலோ, விஷம் உதிரத்திற் கலப்பதுபோல, பாஷாபிமானங்கெட்ட பாவிகள் சமூகமுழுவதும் அதி துரிதமாகப் பரவிவிடுவார்கள். பாஷை நலமெலாம் வற்றி வற்றிக் கடைசியாக ஒன்றுமில்லாமற் போகும். பாஷை பட்டுப்போய் விட்டால் மாந்தரனைவரும் மதியழிந்தவராவர். அசுத்தத்திலிருந்து பல வகைப் புழுக்கள் பிறப்பதுபோல நாளுக்குநாள் விசித்திர விசித்திரமான துன்பங்கள் புலபுலெனத் தோற்றிப் படர்ந்து நாடு முழுவதையும் நரக பூமியாக்கி நாசஞ்செய்துவிடும். பாஷை வீழின் தேசமே வீழும் என்ற இவ்வுண்மை பலதேச சரித்திரங்களை ஆராய்ந்து பார்த்தால் தெளிவாகத் தெரியவரும்.

நாம் வசிக்கும் நாடாகிய தமிழ்நாட்டுக்குத் திரும்புவோம். நமது தாய்ப்பாஷை தமிழ். இத் தமிழ்த்தாய் தன்மாட்டுப் பரிவில்லாத பதர்ப் புதல்வரைப் பெரும்பான்மையாகக்கொண்டிருந்த பாதகக்காலமுமுண்டு. அது எக்காலமென்று இங்கே எடுத்துரைப்பது அவசியமல்ல. அக்காலம் இக்காலமல்ல என்று மாத்திரம் உறுதியாகக் கூறவேண்டும். நிகழ்கின்ற காலம் எக்காலத்திலும் நற்காலமே. பழங்கொள்கைகள் எவ்வாறிருப்பினும் அவற்றின்பால் சற்றும் பற்றுப்பற்று வைத்திருப்பதே தமது கடமையெனக்கொண்டு, "இது கலிகாலம். கலி முற்றி யாவுங் கெட்டுவிட்டன. அறிவு, ஆசாரம், தருமம், பாஷை எல்லாம் ஒழிந்துவிட்டன. இனி இந்த யுகத்தில் உலகு உயர்வடையவேண்டும் என்ற எண்ணமே இருக்கக்கூடாது. எல்லோரும் நாசமாகப் போகவேண்டும்" என்ற நியாயமற்ற அவலக்கொள்கையில் குருட்டு நம்பிக்கையுடையவர்

களுக்கு நாம் என்ன சொல்வது என்றுதான் சரியாகத் தெரியவில்லை. ஆனால் அவர்களுக்கும் உற்சாகத்தை அளிக்க முயன்று சில மொழிகள் கூறுவோமாக. அவர்கள் கொண்டாடும் பழஞ்சாத்திரப்படி கலியுகத்திற்கு வரையறை நான்கு லக்ஷத்து முப்பத்திராயிரம் வருஷங்கள். இவற்றுள் இற்றைய வரையில் 5017 வருடங்களே கழிந்துள்ளன. ஆகையால் கலி முற்றவில்லை. முற்றுவதற்கு இன்னும் நான்குலக்ஷத்துச் சில்லரை வருடங்கள் செல்லவேண்டும். இப்பொழுது நிகழ்வது பச்சைப் பசுங்குழவிபோன்ற இளங் கலிகாலமே. இதில் புண்ணிய யுகமாகிய துவாபர யுகத்தின் நன்மைகளே இன்னும் படிந்திருக்கக் காரணமிருக்கலாமன்றி முற்றிய கலியின் வாசனைகூட இன்னும் வீசவில்லை என்னலாம். அவ்வாசனை தொடங்குவதற்கு ஆயிரக்கணக்கான வருஷங்கள் செல்லவேண்டுமென்றுங் கூறலாம். — சரி — இந்தச் சாஸ்திர தர்க்கக் கதையையெல்லாம் விட்டுவிட்டு நாம் சொல்லவேண்டிய விஷயத்தை நியாயத்தை அநுசரித்துக் கூறப்புகுவோம்.

இப்பொழுது நிகழ்வது நற்காலமே. அபிவிர்த்தி! அபிவிர்த்தி! அபிவிர்த்தி! என்ற மந்திரம் நமது நாடுமுழுவதும் முழங்குகின்றது. தமிழ் நாட்டுக்கு உயிராகிய தமிழ்ப் பாஷையையா அந்த மந்திரம் பற்றாமலிருக்கும். தாய்த் தமிழின்பால் அபிமானமில்லாத தமிழர்கள் இகழத் தக்கவர்கள் என்ற உணர்ச்சி வியாபித்திருக்கிறது. "எனக்குத் தமிழ் சரியாகப் பேசக்கூடத் தெரியாது" என்று கூறுவது தங்களுக்குக் கௌரவமென எண்ணும் ஈனத் தமிழருக்கு இப்பொழுது இருக்கும் மதிப்பு அவமதிப்பே. நல்ல தமிழ்ப் பத்திரிகைகளும் புத்தகங்களும் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. பல குக்கிராமங்களிற்கூடத் தமிழபிவிர்த்திக்குரிய சங்கங்கள் தாபிக்கப்பட்டுவருகின்றன. பாடசாலைகளில் மத்திம வகுப்புகளில் தாய்ப் பாஷாஞானம் கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது. அரசாங்கத்தார் மிகுந்த பொருட்செலவில் புதியதும் பெரியதும் அரியதுமாகிய தமிழகராதி யொன்று பிரசுரிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தமிழ் நாட்டில் கல்வி யனைத்தையும் முக்கியமாகத் தமிழிலேயே கற்பிக்கவேண்டுமென்ற ஒரு உணர்ச்சியும் தோன்றியிருக்கிறது! சமூகம் நிகழ்கின்ற தன்மைக்குக் காரணமாயிருக்கிற பெண்பாலார்க்குத் தாய்ப் பாஷை மூலமாகவே உயர்ந்த கல்வி அளிக்க வேண்டுமென்ற ஒரு பெரிய முயற்சி நிகழ்ந்தே வருகின்றது. மேல்நாட்டுப் பாஷைகளிலுள்ள சமுத்திரமயமான இலௌகிக சாத்திரங்கள் தமிழில் இல்லாத பெருங்குறையை முற்றும் நிவர்த்திக்கப் பல முயற்சிகள் நடக்கின்றன. இவைகள்தான் எங்கேயோ மங்கிக்கிடக்கும் சிற்றறி

வுடையாளாகிய எனக்கு எட்டியவைகள். இவைகளைத் தவிர இன்னும் என்னென்ன நிகழ்ச்சிகள் துலங்குகின்றனவோ! இவைகளெல்லாம் ஏன் ஏற்பட்டுள்ளன? தமிழ் தாழ்வடைதற்கா? தழைப்பதற்கா?

ஆனால் இந்நிகழ்ச்சிகளே நமது தாய்த் தமிழின் தக்க அபிவிர்த்திக்குப் போதுமென்ன நான் சொல்லவில்லை. இம் முயற்சிகளும் இவைகளின் ஆர்வமும் இன்னும் பன்மடங்கதிகமாகப் பல்கவேண்டியது ஆவசிகமே. நான் இங்கே முக்கியமாக வற்புறுத்த வந்ததாவது:— தமிழ் நாட்டாரனைவரும் தங்கள் உளக்கண், புத்திக்கண், ஸ்தூலக்கண் ஆகிய மூன்று கண்களையும் நன்றாகத் திறந்து, இனித் தமிழ் படிப்படியாக ஏற்றமடையத்தான்வேண்டும் என்ற உண்மையை வெண்மையாகப் பார்க்க வேண்டும். “ஐயோ! நிகழ்காலமும் எதிர்காலமும் எவ்விதத்திலும் கேடுகாலமே, அபிவிர்த்தி என்றால் தீமைகளுக்கு அபிவிர்த்தியேயன்றி இனி நன்மைக்கெல்லாம் நாசம் என்பதே விதி, ஆகையால் தமிழாவது! தழைக்கிறதாவது!” என்ற அந்தக அவல எண்ணங்களையும் பேச்சுக்களையும் அடியோடழித்துவிடவேண்டும். தமிழ் தழைப்பதில் நமக்கு ஊக்கத்தை மேன்மேலும் பெருக்கி, நமது தமிழ்த் தாயின் பெருமையை உயர்த்த நம்மாலியன்றவரை உழைப்போம். அவ்வாறே சகல கலாவல்லியாகிய கலைமகளும் கடாக்ஷித்து மங்களத்தைப் பொங்கச் செய்வாளாக.

மங்களம்.

---

## தொண்டைமண்டல சதகம்.

---

### ஏகாம்பரச் சம்புவராயன்.

“மேதைப் புலவரென் னேகாம் பரசம்பு மெச்சநெடுங்
காதைப் புலவ ரிரட்டையர் பாடுங் கலம்பகமு
மோதற் கரியநல் லேகம்ப வாண ருலாவுமந்த
மாதைப் பலுவலும் பாராட் டிடுந்தொண்டை மண்டலமே.” (69)

### பொழிப்புரை.

பேரறிவினையுடைய புலவர்களால் வாழ்த்தப்பெற்ற காஞ்சிபுரம் ஏகாம்பரசம்புவராயன் மகிழும்படி நீண்ட சரித்திரத்தையுடைய புலவர்களாகிய இரட்டையர் பாடிய கலம்பகமும், ஏகாம்பரநாதருலாவும், *திரு

---

*“வருக்கைத் தடம்பொழி லாமாதை யையர்க்கு மாசென்றில் லா
முருக்கொத்த மேனி யழகிய நாதர்க்கு மூச்சரவத்
திருக்கைக் கமல வாணர்க் கரிதிருத் தேவியன்றேல்
அரிக்குப் பொருளுரை யீர்கெடு வீர்நும் மறிவின்மையே.”

வாமாத்தூர்க் கலம்பகமும் ஆகிய பிரபந்தங்களாற் சிறப்பித்துக் கொண்டாடப்படுவதும் இத் தொண்டைமண்டலமென்ப.

"கம்பாவு கலம்பகத்திற் கிரட்டையர்கள்" என்று புகழ்ந்தோதப்பெற்ற இரட்டையர் 1337-1360 வரை, காஞ்சீபுரத்தை அரசாண்டு வந்த சகலோகச் சக்கரவர்த்தி ராஜ நாராயணசம்புவராயனின் காலத்தில் இருந்துவந்தனரென்பது சாஸன ஆராய்ச்சியால் அறியப்படுகிறது. இவன் சமகாலத்திலோ, அல்லது சற்று முன்பின்னோ ஏகாம்பரசம்புவராயன் என்பவனும் காஞ்சீபுரத்தை அரசுபுரிந்திருப்பதாக "ஏகாம்பரநாதர் உலா" வால் தெரிகிறது. இவ் விருவரில் இராஜ நாராயண சம்புவராயன் இரட்டையர் விஷயமாக நடந்துகொண்ட விவரங்களொன்றும் தெரிந்துகொள்வதற்குப் போதிய சாதனங் காணப்படவில்லை. ஏகாம்பரசம்பன் பல விடத்தும் புகழப்படுகிறான். அது பின்வருமாறு:—

"சம்பு குலத்தொருவன் சாற்றுகைக்கா மென்றளித்த
செம்பொன் மணிமகுடஞ் சேர்வித்து." (61)

"வடித்தசுடர் வேற்சம்பன் வாழ்மல்லி நாதன்
கொடுத்த திருத்தேர்மேற் கொண்டு." (102)

"செம்பதுமை கேள்வன் திருமல்லி நாதனுயர்
சம்புபதி நல்குந் தடந்தேர்." (147)

"தத்துபரி §பல்லவன் சம்பு குலப்பெருமான்
வைத்த துலாபார மண்டபத்தும்." (151).

எனவரும் கலிவெண்பாக்களில், "சம்பு குலத்தொருவன்" "வேற்சம்பன்" "சம்புபதி" "தத்துபரிபல்லவன்" "சம்பு குலப்பெருமான்" எனப் பயிலும் சொற்கள் ஏகாம்பர சம்புவராயனைக் குறிக்கின்றன.

---

§ பல்லவன் சம்புகுலப் பெருமான் வைத்த துலாபாரமண்டபத்து என்பது — ஏகாம்பர சம்புவராயனால் 'துலாதானம்' ஓர் மண்டபத்தில் செய்யப்பட்டதாக விளங்குகிறது. இம்மண்டபம் காஞ்சீபுரம் கிழண்டை ராஜவீதியில் ஈசானத்திலிருக்கிறது. துலாதானமென்பது (துலா — நிறைகோல் அல்லது தராசு, தானம் — கொடுத்தல்.) அரசனையும் பொன்னையும் இருநட்டுவமாக வைத்து அரசன் நிறைகொண்ட பொன்னை உத்தமவேதியர்க்குத் தானஞ்செய்தலாம். அரசர்க்கு இது மரபு. இதுவன்றி இவன், ஏகாம்பரநாதர்க்கு மணிமகுடம், தேர் முதலியவை செய்துவைத்தானென்றும் புகழப்படுகிறான்.

"மல்லிநாதன்" என்பது காஞ்சிபுரத்தை ஆள்பவன் என்பது பொருள். இதுவன்றி,

"எறிக்கும் புகழ்க்கச்சி யேகாம் பரன்சம்ப னெண்டிசைக்கும்
பொறிக்கும் புலிக்கொடி யான்†புயம் வேட்டவிற் பூவையன்னாள்
வெறிக்குங் குமக்கொங்கை மீதே விழிசொரி வெள்ளந்துள்ளித்
தெறிக்குந் திவலை யழிக்குஞ்சிந் தூரத் திலதத்தையே."

என வரும் "பல்லவராயன் கோவை"யாலும், ஏகாம்பர சம்புவராயனது அரசாட்சியும், தமிழாதரிப்பும் பிரபலமாயிருந்ததாக விளங்குவதோடு, இரட்டையர் பாடிய சிறந்த கலம்பகமும், ஏகாம்பரநாதருலாவும், திருவாமாத்தூர்க் கலம்பகமும், சம்புவராயன் முன்னிலையிலேயே அரங்கேற்றப்பெற்றதாகவும் அறியப்படுகிறது. இராஜ நாராயண சம்புவராயன் இரட்டையர் காலத்தில் இருந்தனனெனினும், இவன் புலவர்கள் பிரபந்தங்களில் புகழ்ந்து கூறப்படாததால், இவன் பெயர் பிரபலமடையவில்லைபோலும்.

சோழராதிக்கம் தென்னாட்டில் நிலைகுலைந்த பிற்காலத்தில், தொண்டைமண்டலத்தைச் சம்புவராயர் என்ற அரசர் ஆண்டுவந்தனரென்றும், இவர்களில் ஒருவரான மல்லிநாத சம்புவராயர் என்பவர், விஜயநகர அரசரது தளகர்த்தரான கம்பணவுடையாரால் வெல்லப்பட்டு அவ்விஜயநகரத்தார்க்கு அடங்கிய சிற்றரசராயினரென்றும், இம் மல்லிநாதர் படுவூர்க்கோட்டத்துக் காவேரிப்பாக்கமான விக்கிரமசோழ சதுர்வேதிமங்கலத்தில் ( சக ௵ 1295. கி. பி. 1373-ல் ) சிலதானஞ்செய்த விஷயம், ஷெயூர் வரதராஜப்பெருமாள் கர்ப்பக்கிருகத்தின் தென்மதிலில் வெட்டப்பட்டிருக்கிறதென்று தெரியவருகின்றன. (Ep. Rep. No. 390 of 1905) இம்மல்லிநாதனே இரட்டையர் காலத்தவனாயின், இரட்டையர் காலம் இற்றைக்கு 513 வருஷங்களுக்கு முற்பட்டதாகும்.

இரட்டைப்புலவரென்பவர் — சோழநாட்டில் ஆடுதுறைக்குச் சமீபத்திலுள்ள ‡"இலந்துறை" என்னுந் தலத்தில் செங்குந்தர் மரபில்

---

† சம்பனது புயத்தை விரும்பி அது கிடையாமையாலுண்டான வருத்தத்தால் பெண்ணின் கொங்கையில் விழுந்து தெறிக்குங் கண்ணீர்ப் பெருக்கின் துளிகள் அவளது நெற்றித் திலதத்தை அழிப்பன என்பது கருத்து.

‡ யோகாம் பெரிய சோழியர்வாழ் வடையா ரீகை யுடையாராய்ப்
பாகாம் பழைய கல்வியினும் பயின்றோ ரென்னவும் பரிசறிந்தோ
மேகாம் பரனார் கச்சியுலா விசைக்கும் புலவ ரிரட்டையர்கள்
வாகாம் பதியா மிலந்துறையால் வழங்குஞ் சோழமண்டலமே. (58)
(சோழமண்டல சதகம்.)

உதித்தவர். இளமையிலேயே பெற்றோரையிழந்து அங்கக்குறைவினராய் வருந்தினரேனும், ஆற்றொழுக்காய்ப் பொருளாழமுடைத்தாய் விரைவிற் கவிபாடும் வன்மையும், அதிலும் பிரபந்தமென்னும் கவிபாடும் இனிமையும் கல்விக்கடலோதையைச் சொல்லத்தரமல்லாதாக்கினர். இவர்கள் தலயாத்திரையில் பல சம்ஸ்தானங்கள் சென்று எதுதரினும் வேண்டாது ஒருபணம் மாத்திரம் பெற்றுச் செல்வர். ¶ திருவக்கை 0"ஆட்கொண்டான்" என்னும் பெயருடைய கொங்குராயனால் அபிமானிக்கப்பெற்றும், திருவண்ணாமலைச் %சம்பந்தன் சொன்ன சமுத்தி பாடியும், $ஆறுவிலகப்பாடியும் புகழ்சிறந்தவர். இறுதியில் வறுமை

---

¶ இது திருவக்கரை என்று சாஸனங்களில் காணப்படுகிறது. திருவக்கை பாடல்பெற்ற க்ஷேத்திரம். புதுச்சேரிப் பக்கத்துள்ளது. இதுவே 'வக்கை' என்று குறுகியிருக்கலாம்.

0 இவன் வில்லிபுத்தூராரைக்கொண்டு பாரதம்பாடுவித்த கொங்கு நாட்டரசன். இவனைக் 'கொங்கர்கோன்' என்று வழங்குவர். இவ்வரசனைப்பற்றித் தமிழ் நாவலர் சரிதையில் அடியில்வரும் பாடலொன்று காணப்படுகிறது. அது வருமாறு:

" சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்ட நாயன் றமிழ்க் கொங்கர்கோன்
பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி பக்கத்திலே
யூனுக்கு வாரா திருப்பாய் விருப்பாகி யுயர்வானிலே
வீணுக்கு நின்றேக மெலிகின்ற தெவ்வாறு வெண்டிங்களே." (96)

% இவன் சமணன். திருப்புகழ்பாடிய ஸ்ரீ அருணகிரிநாதருடன் வாதுபுரிந்து தோல்வியுற்றவன். இரட்டையரைப் பாடுமாறு கூறிய சமுத்தி அடியில் வருமாறு:

மன்னு திருவண்ணா மலையிற்சம் பந்தனுக்குப்
பன்னு தலைச்சவரம் பண்ணுவதேன் — மின்னி
னிளைத்த விடைமடவா ரெல்லாருங் கூடி
வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு.

(தமிழ் நாவலர் சரிதை.)

$ ஆற்குழை யோவர வோவாயர் பாடி யருமனையோ
பூற்கட லோதம்ப மோதங்கு மாவம் பலபலவா
மாற்றமு மாகிநின் றூர்மாதை நாதர் வலங்கொள் பம்பை
மேற்கரை கோயில் கொண்டார் புரஞ்சீறிய வெங்கணைக்கே."

(தமிழ் நாவலர் சரிதை.)

மிருந்து குன்றும் வனமும் கடந்து பலர் பிறரைப் புகழ்ந்து பாடி வாணாள் கழித்தவர். சாங்கிய சாஸ்திரத்தில், பிரகிருதி, புருஷன் என்னும் இரண்டு தத்துவங்களுள் புருஷன் முடம், பிரகிருதி குருடு, குருடான பிரகிருதியின்மேல் முடமான புருஷன் நடைபெறுகின்றமைபோலவும், இவ் விரு தத்துவங்களுள் ஒன்றின்றி மற்றொன்று நடைபெறாதது போலவும், இவ்விரட்டையர்கள் சாங்கிய சாஸ்திரங்களின் தத்துவங்களே இவ் விரு மூர்த்திகளாக அமைந்தனர்போலும். சிவபெருமானிடத்தில் பெருகிய பக்தியுடன் புண்ணியப்பேற்றால் நல்லிசைப் புலவர்களாகத் திகழ்ந்த இவர்கள் அன்பும், ஒற்றுமையும் உடையாராய்க் கல்வியிலும், கருத்திலும், பக்தியிலும் சமத்துவம்பெற்று எப்பொழுதும் ஒன்று கூடியே குருடர் முதுகின் முடவர் எழுந்து வழிகாட்டாநிற்ப, என்றும் அருப்பண்பினராய் ஒருமித்துத் தோன்றுதலின் இவர்கட்கு "இரட்டையர்" என்று புனைந்துரைப் பெயரும் புலவர் கூட்டத்துள் மருவி வழங்கிவரலாயிற்றென்னுமாம்.

சி. கு. நாராயணசாமி முதலியார்,
கோயமுத்தூர்.

---

# இலக்கியப் பகுதி.

## யசோதர காவியம்.

### ஐந்தாவது சருக்கம்.

(வெண்டாமரை — ௪, இதழ் — ௧௦, 215-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஊற்படு வலைப்பொறி முதற்கருவி நூற்றோ
டேற்றிடை யெயிற்றுஞம லிக்குல மிரைப்ப
நாற்படை நடுக்கட னடுச்செய்கம னேபோல்
வேற்படை பிடித்தரசன் வேட்டையின் விரைந்தான்.

இங்ஙனம் வேட்டைமேற்சென்ற யசோமதியரசன், காட்டில் தவம் செய்துகொண்டிருந்த சுதத்தமுனிவரைத் தன்னெதிரிற் கண்டு, இத்தகையரைக் காணுதல் அமங்கலமென்று கருதி அவரை இழித்துக் கூறி அக்காட்டினுட் புகுந்தான். அன்று காடுமுழுதும் தேடியும் வேட்டைக்கு ஒரு விலங்கும் அகப்படாமற்போகவே, இது அச் சுதத்த முனிவ

னால் நேர்ந்ததென்று சீற்றங்கொண்டு திரும்பிவந்தவன், அம்முனிவர் உயிர்பறிக்க வெண்ணி அவர்மேல் ஐந்நூறு வேட்டைநாய்களை, செந் தரைகள் சென்றுகவர் கென்றென விடுத்தான். அந் நாய்கள் அம் முனிவரது தவப்பெருமையால் அவரை நெருங்கிச் செல்லுதற்கஞ்சி ஒரு வில் லளவுக் கப்பால் நின்றுவிட்டன. அதுகண்ட அரசன் கடுஞ்சினங் கொண்டு அவரைக் கொல்லத் தன் உறையினின்றும் வாளை யுருவுகின் றான். அந்நிலையில், அரசனுக்கு உயிரனைய நண்பன் கலியாணமித்திரன் எனும் பெயரிய வணிகனொருவன் வந்து இடைபுகுந்து, "அரச! கெட் டேன்! மாதவன் முன்வந்து வாளுருவுகின்றது என்கொலோ! அரசச் செல்வத்தைத் துறந்து வெறுத்துவிடுத்து அறமே வடிவாக விளங்கு கின்ற இம்முனிவரது திருவடிக்கண் வழிபாடுசெய்யாமல் சினத்தா லெரிகின்ற மனத்தோடு மறப்படை யெடுப்பதுவேன் மாலைமற வேலோய்!

ஆதவெனி னாகவிவ ரழியவெனி லழிக
மேகமிவண் வருகவெனின் வருமதுவும் விதியின்
ஏகமன ராமுனிவர் பெருமையிது வாகு
மாகமழை வண்கைமத யானைமணி முடியோய்.

இவரை அன்போடு அடைந்தவர்கள் அரசராய் விளங்குவார்கள். அங் ஙனமன்றி இகழ்ந்தவர்கள் கொடியநரகில் வீழ்வார்கள். இவர் திருவடிக்கண் இந்திரர்கள் வந்து பணிந்து வேண்டி நிற்பினும், தீய நினைப்போடு யாரேனும் இவ்வாறு தீமைசெய்யப் புகினும் கருத்து மாறு படாமல், சிலர் மாறுகொண்டுவருதல் அவரவர் வினைப்பயனென்றே கொள்வதன்றி, தம்மை யடைந்தோரைத் தமரென்றும் பிறரென்றும் கருதாதவர். இவ்வுலகிலுள்ள எவ்வுயிரையும் தம்முயிர்போற் கருதி அருள்சுரந்து பல்லுயிர்களையும் காக்கும் பண்புடையவர். அவரது திருவடியைப் பணிந்தால் உனது வெவ்வினை கடந்துயிர் விளங்குதும் விறல்வேலோய்!" என்று இனிமையாகக் கூறினன்.

அது கேட்ட அரசன் சினந்தணிந்து கைவாளையும் உறையிற் போட்டு வணிகனை நோக்கி, "இவர் யார்? அழுக்கடைந்து கருமேனிய ராகக் காணப்படுகின்றார்; இவரை யான் வணங்குவதெப்படி?" என் றனன். எனலும், வணிகன் வழுத்துகின்றான்: "அரசே! இம்முனிவர் கலிங்கதேயத்தரசர்; கங்கை குலத்தோன்றல்; தமது தோள்வலியினால் ஒற்றை வெண்கொற்றக்குடை நீழலின்கண் உலகமுழுதையும் ஆண்ட சிங்கம்போன்றவர்; மேகத்தின்கண் மின்னலும் வானவில்லும் தோன்றி

மறைதல்போல, போகமும் பொருளும் இளமையும் விரைவில் அழிந்து விடுமென்று கருதி அருள்பெருகும் அறநெறியில் நின்று, போகமிருந்த பொன்னுலகடைதலையே தம் கருத்திற் கொண்டுள்ளார்;

நாடுநக ரங்களு நலங்கொண்மட வாரு
மாடும்கொடி யானையதிர் தேர்புரவி காலாள்
சூடுமுடி மாலைதழை தோள்வளையொ டார
மாடைமுத லாயினவொ டகல்கவென விட்டான்;

வானவர்களும், வையத்தரசர்களும், தானவர்களும் வந்து வணங்கு தற்குரிய தவ வடிவுகொண்டார்; மனத்துக்கண் மாசின்றி உயிர்களுக்கு உறுதியே யுன்னி, கானுமலை நாடுகள் கலந்துதிரி கின்றன்; இம் முனிவர் வினைமாசையே மாசெனக் கொள்பவராதலின், தமதுருவில் அம்மாசு தங்காவண்ணம் ஞானவொளியையும் எவரிடத்தும் புன்னகை யுடையனுதலையுமே தமக்கு அணியெனக் கொண்டுளார்; இம்முனிவர் யோகத்தின் பெருமை இவையாகும்; இறைவ! காட்டிற்புரியும் கொலைத் தொழிலும் மற்றைக் கொடிய வினைகளும் நின்னைவிட்டு நீங்கிவிட் டனவோ! இப்போழ்து என்ன நினைக்கின்றாய்! இந்நாய்களும் முனி வரை யணுகாது பொறுமையுற்று நிற்றலை நீ பார்!" என்று அவன் உள்ளங்கொள்ளும்படி யியம்பினன். இயம்பலும், அரசன் முனிவர் திருவடிகளில் முடிபட வணங்கி, "இன்று யான் இழைத்த பிழை நீங்க வேண்டுமாயின், என் தலையை யரிந்து இம்முனிவர் திருவடிகளில் இட வேண்டும்" என்று நினைத்தனன். அதனையறிந்த சுதத்த முனிவர் அரசனை நோக்கி, "மன்ன! நீ மனத்து நினைத்ததை விடுத்திடு; தன் னுயிரைப்போல் மன்னுயிரை வளாப்பது கருதியுடையதென்றால், நின் னுயிரை நீ களையின் நின்னருள் என்ன பயனுடைத்தாம்? முன்பு நீ புரிந்த கொலைப் பிழை நீங்காதிருக்க, பின்னை நினைகின்றவிது பிழை பெரிது மென்றன். அரசன் மறுபடியும் அம்முனிவர் திருவடிக்கண் முடிபட வணங்கி, "என் முன்னோர்களது பிறப்பு முதலியவற்றை அருளிச்செய்யவேண்டும்" என்று வேண்ட, முனிவரும் அப்படியே தமது அவதி ஞானத்தால் தாமுணர்ந்தவைகளை யசோமதி யரசன் அறி யும்படி அருளிச்செய்கின்றார்:

"உனது பாட்டனாகிய அசோகன் இம்மண்ணுலகிற் செய்த தவப் பயனால் விண்ணுலகடைந்து தேவனாகிப் பிரமனுலகத்தில் அளவிறந்த காலம் அழகிய தெய்வமகளிரோடு இன்புற்றிருக்கின்றான். உன் தாயா கிய அமிர்தமதி, உன் தந்தையாகிய யசோதரனையும், அவன் தாயாகிய

சந்திரமதியையும் வஞ்சனையால் நஞ்சிட்டுக் கொன்று, அட்டபங்கனது சேர்க்கையால் குட்டநோயடைந்து நரகில் வீழ்ந்து நலிகின்றாள். நரகங்கள் இருளிலிருள், இருள், புகை, சேறு, மணல், பரல், ஒளி என்பன. இவையே எழுவகை நரகக்குழிகளாகும். மேருமலையைத் தள்ளினும் வெந்நீர்போலவும் தண்ணீர்போலவும் உருக்கவல்ல ஐந்து நிலப்புரைகளுடைய புகைநரகில் அமிர்தமதி வீழ்ந்தருகினாள்.

ஆழ்ந்தகுழி வீழ்ந்தபொழு தருநரக ரோடிச்
சூழ்ந்துதுகை யாவெரியு ளிட்டனர்கள் சுட்டார்
போழ்ந்தனர்கள் புண்பெருக வன்றறி புடைத்தார்
மூழ்ந்தவினை முனியுமெனின் முனியலரு முளரோ.

நீ முன்பு வெந்த செந்தசைகள் தின்றனையென்று கூறி அனலில் வெதுப்ப வெந்து கொதுகொதென வுருகுவாள். முகங்களில் காய்ந்த செப்புச் சலாகைகளைத் திணிப்பர். முகமும் வெந்தழலால் நைந்து உருகியொழுகும். அவள் உடலமெல்லாம் கன்னங்கறேலென்று கருகின. எரியிலிட்டு உருகும் பாவையொன்றைக் கொணர்ந்து, இதுவும் தழுவுதற்கினிதே யென்று சொல்லி அதைத் தழுவும்படி செய்யவே, பொருபொரு பொரிந்துபோடி யாழுடல மெல்லாம். உணவில் நஞ்சு பெய்து கொல்வித்தவள் முழுதும் அழுகிவிழும் நாவால் அலற அந்நாவு முருகி வருந்தினும் அவள் இங்குச் செத்தொழிவதில்லை. தீவினைகள் தரும் துன்பங்களெல்லாம் விளைநிலமாகிய இந்நரகங்களில் துன்பமேயன்றி யின்பமுளதாகுமோ! முன்பு நீ உனது உறவினர் தசையென்று விலக்காது அதனை யுண்டாயாதலின், உனக்கு உனது தசையும் உண்பதற்கு இனிதாமென்று கூறி, அவள் அவயவங்களை வெட்டி அவள் முன்னே வைத்துத் தின்னும்படி செய்ய, அவள் மிக வருந்தி அதனைத் தின்பாள். இம்மட்டோ! இன்னும் செக்கிலிட்டுத் திரிப்பார்கள். நெருப்புலையில் காலையும் தலையையும் வைத்தெரிப்பார்கள். உருக்குவார்கள். கோபித்துக் கொலைக்கழுவிலிடுவார்கள். உலையிலிட்டு உருக்கும் வருத்தமோ சொல்ல முடியாதது. பழவினைகள் நின்று வருத்துகின்ற இந்நரகத் துன்பங்களையும் இன்னும் வேறு துன்பங்களையும் அமிர்தமதி யனுபவிப்பது அளவேயில்லை. இந்நரகத் துன்பங்களை வரையறுத்துக் கூறுவது ஒரு நாவுடைய மனிதர்களால் முடியாது. உன் தந்தையாகிய யசோதரனும், அவன் தாயாகிய சந்திரமதியும் முன்னாட்செய்த உயிர்க்கொலை வினைக் கொடுமையால் விலங்குகதியில் நடுங்குதற்குரிய துன்பந் தொடர்ந்த வண்ணமிது வடிவமிவை வளரொளிய பூணாய்! யசோதரன்

மயிலாய் முட்பன்றியாய் மீஞ்கிப் பின்பு இருமுறை ஆடாகிப் பின்னர்க் கோழியானன். சந்திரமதி நாயாய்ப் பாம்பாய் முதலையாய் ஆடாய் எருமையாய்ப் பிறகு கோழியானள். அக்கோழிப் பிறப்பில் அவர்கள் அகம்பனர் என்னும் முனிவரருளிய அறவுரை கேட்டு அதன் பயனாக, உன் னுகையால் மடிந்து இப்போது உன் மகன் அபயருசியாகவும், உன் மகள் அபயமதியாகவும் வந்து பிறந்து வளர்கின்றார்கள். இதுதான் நும் மவர்கள் பிறவி வினையும் அவ்வினையின் விளைவுகளும்'' என்று கூறினர்.

அவற்றையெல்லாங் கேட்ட யசோமதி யரசன் விதிர்விதிர்த்து உள்ளுடைந்து அச்சமுற்றனன். அவ்விடத்திருந்த அபயருசியும், அபய மதியும் அம்முனிவரது அருளால், கழிந்த தத்தம் முற்பிறப்புக்களை நினைந்துணர்ந்து பெருங் கவலையுள் அழுந்தினர்கள்.

(வரும்.)

பத்திராதிபன்.

---

# இலக்கணப் பகுதி.

## பிரயோக இலக்கணம்.

### கடு. கோஷ்டி, கூட்டம், சங்கம்.

இந்த மூன்றும் அநேகர் சேர்ந்த ஓர் தொகுதிக்குப் பெயர்.

பலர் ஓரிடத்தில் கூடியிருப்பதைக் கூட்டம் என்கிறோம். நீண்ட காலத்துக்கு ஒரு காரியத்தைப் பொதுவில் நடத்திவரவேண்டுமென்கிற எண்ணத்தோடு பலர் சேர்ந்து ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு ஏற்படுத் தும் கூட்டுக்குச் சங்கம் என்று பெயர். ஒரே தன்மை, பிறப்பு, பயிற்சி முதலியன உடைய ஜனங்களின் சமூகத்தைத்தான் பெரும்பாலும் கோஷ்டி என்று சொல்லுகிறோம்.

கோஷ்டியானது, ஒன்று இயற்கையாக ஏற்படுகிறது, அல்லது தக்கமனிதர் சேருவதால் வளருகிறது. கூட்டமானது அகஸ்மாத்தாய், அல்லது ஒருவனே பலரோ அழைப்பதன்பேரில், ஓரிடத்தில் கூடுகிறது. பலருடைய ஒருமனதான ஒப்பந்தத்தின்பேரில்தான் சங்கம் பிறக்கிறது.

ஒரு கூட்டத்திலுள்ள ஜனங்களுக்குள் ஒருவருக்கொருவர் உள்ள சம்பந்தமானது மிகவும் இலேசானது. கூட்டம் கலைந்ததும் அவர்களுக்

குள்ளிருந்த ஒட்டு அற்றுப்போய்விடுகிறது. கூட்டமும் சொற்பகாலம் தான் ஒன்றுகூடி இருக்க முடியும்.

ஒரு சங்கத்திலுள்ள அங்கத்தினருக்கு அந்தச் சங்கத்தின் நோக்கத்தைப் பொறுத்தமட்டில் பரஸ்பர சம்பந்தம் அதிகம். அதில் சேருவோரை அங்கத்தினர் என்று சொல்லுவதற்கிணங்க, சங்கமானது ஓர் தனி உயிர் பெற்ற சரீரம்போன்றது. விவகாரத்தில் ஒரு தனிப் பெயர் வழிபோலப் பாவிக்கப்பட்டும் நடத்தப்பட்டும் வருகிறது.

கோஷ்டி என்பது ஒரு சமூக ஒற்றுமையையொழியச் சட்டரீதியான ஒற்றுமை யில்லை. ஒரு சங்கத்திலுள்ள மனிதர்களில் ஒருவர் மீது ஒருவருக்கு நீதிஸ்தலங்களில் தீர்மானிக்கக்கூடிய பாத்தியங்களும் கடன்மைகளும் உண்டு. ஆனால் ஒரு கோஷ்டியைச் சேர்ந்தவர்களுக்கு, கோஷ்டியில் சேர்ந்திருக்கும் காரணத்தால் மாத்திரம், நீதியில் செல்லக்கூடிய பரஸ்பர பாத்தியமாவது கடன்மையாவது இல்லை. இருப்பினும் இதற்கு மாறாக, ஒரு கோஷ்டியைச்சேர்ந்த மனிதருக்குள் ஒரு சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்குள் இருப்பதைவிட அதிகமான பற்று, அழுத்தமான கட்டுப்பாடு இருக்கும்.

தன்னுடைய அத்தியாத்மக் கொள்கைகளை ஏற்றுக்கொள்ளும் சனங்களின் சமுதாயத்திற்குப் புத்தபகவான் சங்கம் என்ற பெயர் வைத்தார். இப்பொழுதும் பௌத்தக் கொள்கையினருடைய சமாஜம் அனைத்திற்கும் பௌத்த சங்கம் என்றுதான் பெயர். ஆனால் மேலே எழுதியுள்ளதிலிருந்து **சங்கம்** என்னும் வார்த்தையை அந்தமாதிரி அருத்தத்தில் இப்பொழுது உபயோகிக்கப்படுத்தக்கூடாது என்று ஏற்படும்.

ஒருவன் ஆசிரியனிடம் கல்வி கற்று முடிந்து அவனிடம் விடைபெற்று மீண்டதும் வித்துவத் கோஷ்டியில் சேர்ந்துவிடுகிறான்.

## ௧௫. யோக்கியதை, மரியாதை, மானம்.

**யோக்கியதை** என்பது தகுதி. இதிலிருந்து நாணயம் என்னும் பொருளையும் குறிக்கும். **மரியாதை** என்பது மனிதரிடத்தில் ஒருவன் நடந்துகொள்ளவேண்டிய ஒழுக்க முறைமை. இதிலிருந்து பிறர் ஒருவன் விஷயத்தில் நடந்துகொள்ளும் ரீதி என்பதையும் அது குறிக்கும். **மானம்** என்பது கௌரவம், உத்தமமான பெருமை.

**யோக்கியதை**க்கும் **மான**த்துக்கும் மனிதனுடைய நிச்சயம்தான் பிரதானம். **மரியாதை**க் குணம் வேண்டுமானால் நல்ல குடிப்பிறந்தாரோடு பழகித்தான் ஆகவேண்டும். **யோக்கியதையும் மானமும்**

அநேகமாய்ச் சர்வதேசங்களுக்கும் சர்வகாலங்களுக்கும் பொதுவான தர்மங்கள். ஆனால் ஒரு நாட்டில் மரியாதை என நினைக்கப்படுகிற நடத்தை இன்னொரு நாட்டில் முற்றிலும் மாறாகக் கருதப்படலாம்.

சாதாரண நடவடிக்கையில் காட்டப்படும் நேர்மையைப்பற்றிப் பேசும்போது மரியாதை என்ற பதத்தைத்தான் பிரயோகிக்கவேண்டும்.

பிறர் நம்மை மரியாதையாக நடத்தவேண்டும் என்று நாம் விரும்பினால் நாம் பிறரை எப்பொழுதும் மரியாதையாகவே நடத்தவேண்டும். வேலையாட்களிடத்திலும், தொழிலாளிகளிடத்திலுங்கூட மரியாதையான வார்த்தைகள் பேசுவதுதான் நாகரிகத்துக்கு அழகு. சொல் நாணயம் தவறுகிறவர்களுக்கு மரியாதை போய்விடுகிறது.

யோக்கியதையற்றவனை மனிதர் நம்பமாட்டார்கள். மரியாதையற்றவனிடம் ஜனங்கள் நெருங்கமாட்டார்கள். மானமில்லாதவனை யோக்கியர்கள் தங்கள் கோஷ்டியில் சேர்க்கமாட்டார்கள்.

உயிரைவிட்டும் மானத்தைக் காக்கவேண்டியது ஆண்மக்கள் கடன். எப்பேர்ப்பட்ட வறுமையான நிலைமைக்கு வந்துவிட்டபோதிலும் ஒருவன் யோக்கியதையினின்று வழுவக்கூடாது.

## கஎ. தோற்றம், சாயல், மாதிரி, களை.

ஒரு மனிதனுடைய உருவம் அசைவுகளையும் நோக்கி அவனுடைய தோற்றத்தை நிச்சயிக்கிறோம். சாத்தனது உருவம் முக்கியமான அம்சங்களில் கோவிந்தனது உருவத்தைப்போல இருந்தால் சாத்தன் கோவிந்தன் சாயலாக இருக்கிறான் என்கிறோம். ஒரு மனிதனுடைய சுபாவத்தையும் அவன் நடவடிக்கையில் லக்ஷணங்களையும் பார்த்து இவனுடைய மாதிரி இப்படிப்பட்டது என்று தீர்மானிக்கிறோம். களை என்பது ஒருவன் முகத்தில் தோன்றும் ஒளி அல்லது ஒளியின்மை.

மனிதரைப்பற்றிப் பேசும்போதுதான் சாயல் என்ற பதத்தைப் பிரயோகிக்கலாம். வஸ்துக்களின் மேனியைப்பற்றிப் பேசும்போது களை என்ற பதத்தை உபயோகப்படுத்தலுண்டு. மற்ற இரண்டு வார்த்தைகளும் பொருள்களைப்பற்றிப் பேசும்போதும் வரும்.

வானுயர் தோற்றம் எவன் செய்யும், தன் நெஞ்சம்
தான் அறி குற்றப்படின்?

மனிதருடைய மாதிரி அறியாமல் அவர்களோடு நட்புசெய்து கொள்ளக்கூடாது.

இரண்டு தச்சர்கள் கட்டும் வீடுகள் ஒரேமாதிரி சௌகரியமுள்ளனவாக இருந்தாலும் அவைகளின் கலை வேறாக இருக்கும். வேலைக்காரன் கட்டினவீட்டின் கலை வேறுதான், சாமானியத் தச்சன் கட்டின வீட்டின் கலை வேறுதான்.

(வரும்.)

வ. வே. ஸுப்ரமஹ்ஹண்ய அய்யர்.

---

# சாத்திரப் பகுதி.

---

## முக்திகோபநிஷத்.

---

(வெண்டாமரை ௪, இதழ் ௮ – ௯, 202-ம் பக்கத் தொடர்ச்சி.)

(முதலில் மனோஜயத்திற்குப் பாகியசாதனங்கள் சொல்லுகின்றார்.)

௪௬. அஸ்தத்தை அஸ்தத்தினால் நன்றாகப் பிடித்துப்பற்றி, பற்களால் பற்களை மாவாகச்செய்து, மற்றை அவயவங்களால் ஆக்கிரமித்து, முதலில் தன் சம்பந்தமான மனதை ஜயிக்கவேண்டும்.

இச் சுலோகத்திற்கு வாச்சியார்த்த மாத்திரம் இங்குச் சொல்லப்பட்டுள்ளது; இதன் அந்தரார்த்தம் சற்குருமுகமாக அறியத்தகுந்தது.

௪௭. நன்றாக ஆசனசுத்தியாக உட்கார்ந்து அப்பியாசியினால் முக்கியமான மனதை அப்போதைக்கப்போது ஜயிப்பதற்கு, நிந்திக்கப்படாத (சாஸ்திர சம்மதமான) உபாயமின்றி முடியாது, மதங்கொண்ட துஷ்ட யானை அங்குசமின்றி வசப்படாததுபோல.

அங்குசமின்றி மதங்கொண்ட யானையை வசப்படுத்த முடியாதது போல, உபாயமின்றி மனதை ஜயிக்கமுடியாது ஆதலின், குருசாஸ்திர சாம்பிரதாயக் கிரமமாக மனதை ஜயிப்பதற்குப் பிரயத்தனம் செய்தல் வேண்டும் என்றாரென்க.

(மனோஜயத்தில் உபாயங்களை விவரிக்கின்றார்.)

௪௮. பிரம்ம வித்தியாப்பியாசம், சாதுசங்கம், மலின வாசனைகளை விடுதல், பிராணசலனத்தை யடக்குதல் ஆகிய பிரசித்தமான இந்த உபாயங்கள் மனோஜயத்தில் தக்கவைகளாய் இருக்கின்றனவல்லவா. இந்த உபாயங்களிருக்க, எவர்கள் பலாத்காரத்தினால் மனதை வளைத்

தற்குப் பிரயத்தனிக்கின்றார்களோ அவர்கள் விளக்கைவிட்டு மைகளினால் இருட்டில் பொருள்களைத் தேடுகின்றவராவார்கள்.

வேதாந்த சாஸ்திராப்பியாசம், சஜ்ஜனசாங்கத்யம், மலினவாசனைகளை விடுதல், பிராணசாஞ்சல்ய நிரோதனம் என்னும் இந்நான்கும் (அதிகார தாரதம்மியத்தைப்பற்றி) சித்தஜயத்தில் புஷ்கலமான சாதனங்களா யிருக்கின்றன. இவற்றை விட்டுப் பலாத்காரமாக மனதை ஜயிக்க முயல்பவர்கள் விளக்கில்லாமல் இருட்டில் உள்ள பொருளைத் தேடுபவர்கட்கு ஒப்பாவார்கள் என்றுரென்க.

இந் நான்கு சாதனங்களின்றி மனதை ஜயிக்கமுடியாதென்பது கருத்து. பிராணஸ்பந்த நிரோதனத்தைப்பற்றிச் சாண்டில்யோபநிஷத்தைப் பார்க்க.

(வரும்.)

ஓர் ஆரியன்.

## சுவிவேக தருப்பணம்.

(ஸ்ரீ சாந்தாநந்த சரசுவதிசுவாமிகள் ஆந்திரமொழியில் அருளியது.)

(வெண்டாமரை — ச, இதழ் ு — சு, 132-ம் பக்கத் தொடர்ச்சி.)

மேற்கூறிய அறுவித சம்பந்தங்களைத் தெரிந்து பக்திசெய்ய, ஞானப் பிரதிபாத்திய திரிவித சம்பந்தங்களின் இலட்சியம் தவறாமல் தெளிவாகும். எங்ஙனமெனின், வேதாந்த சாத்திரங்கள் தற்பதத்திற்கும் துவம்பதத்திற்கும் சம்பந்தத் திரயத்தினால் அகண்டத்துவம் போதிக்கின்றன. சம்பந்தத் திரயமாவது: இரண்டு வாக்கியங்கட்குச் சமானாதிகரண்ணிய சம்பந்தம், இரண்டு பதார்த்தங்கட்கு விசேடண விசேடிய பாவ சம்பந்தம், இரண்டு பதங்களோடேனும் இரண்டு பதார்த்தங்களோடேனும் பிரத்தியகாத்மாவிற்கு இலட்சிய இலட்சண சம்பந்தம். இப்படிச் சம்பந்தம் மூன்றுவிதங்கள்.

இதற்குத் திருட்டாந்தம். "ஸோயம் தேவதத்த:" அந்த இந்த தேவதத்தன் என்பதில், ஸ: = அவன், அயம் = இவன், தேவதத்த: = தேவதத்தன். இதிலுள்ள 'அவன்' என்னும் பதத்திற்கும் 'இவன்' என்னும் பதத்திற்கும் தேவதத்த பிண்டமே சமானாதிகரணம். அதாவது அந்தத் தேவதத்தனே இவன் என்று சொல்லப்பட்டதாயிற்று. அந்த அல்லது அவன் என்றதனாலே முன் பார்க்கப்பட்டவனே. இப்போது பார்க்கப்படுபவன் என்க. இதில் பார்க்கப்பட்ட புருடன் ஒருவனாயினும், அவன் இவன் என்னும் இரண்டு பதங்கள் தேவதத்தன் என்னும் ஒரு

தேகத்தையே காட்டுகின்றனவன்றி வேறொன்றைக் காட்டுவதில்லை. ஆதலின் இரண்டு பதங்கட்குச் சமானாதிகரண சம்பந்தமுள்ளது. இச் சம்பந்தத்தைப்பற்றி யோசிக்கையில், குடத்திலுள்ள நீரினிடத்தும் மேகத்திலுள்ள நீரினிடத்தும் பிரதிபிம்பித்த ஆகாயத்திற்கு உண்டான கடாகாச மேகாகாசங்களென்னும் பெயர்கள் அசத்தியமாகும். குடத்திற்கும் மேகத்திற்கும் உள்ளிலும் வெளியிலுமுள்ள ஆகாயங்களிரண்டும் கற்பிதங்களாதலின் அவை எப்போதும் ஒன்றேயென்றபடி, தற்பதத்திற்கும் துவம்பதத்திற்கும் சைதன்னியம் ஒன்றேயென்பதில் சமானாதிகரண்ணியமாதலின், இரண்டு பதங்கட்குச் சமானாதிகரண்ணிய சம்பந்தமுள்ளது.

அந்தக்காலம் அந்தத்தேசம் முதலியவற்றோடு கூடின தேவதத்த வாசகமான அவன் என்னும் பதத்தின் பொருளுக்கும், இந்தக்காலம் இந்தத்தேசம் முதலியவற்றோடு கூடின தேவதத்த வாசகமான இவன் என்னும் பதத்தின் பொருளுக்கும் ஒன்றுக்கொன்றுள்ள பேதங்களை விட்டுப் பார்ப்பதினாலே அதாவது முன்பு ஒரு தேசத்தில் ஒருகாலம் ஒரு வயது ஒரு உருவம் ஒரு வேடம் ஒரு வியாபாரத்திலிருந்த ஒரு புருடனைக் கண்ட மற்றொருவன், வெகுகாலங் கடந்த பிறகு அப்புருடனை மற்றொரு தேசத்தில் மற்றொருகாலத்தில் மற்றொரு வயதில் மற்றொரு உருவத்தில் மற்றொரு வேடத்தில் மற்றொரு வியாபாரத்தில் இருக்கப்பார்த்து, முன் பார்த்த ஞாபகத்தினாலே ஆலோசித்து அவனோடு பேசி, அத்தேசம் அக்காலம் அவ்வயது அவ்வுருவம் அவ்வேடம் அவ்வியாபாரத்தையும், இத்தேசம் இக்காலம் இவ்வயது இவ்வுருவம் இவ்வேடம் இவ்வியாபாரத்தையும் விட்டு, அப்புருடனை விடாமல், அப்புருடனே இப்புருடனென்று தெரிவித்தலினாலே, ஒன்றுக்கொன்று விசேடண விசேடியமாகின்றதாதலின், இதில் விசேடண விசேடிய பாவ சம்பந்தமுள்ளது.

அதுபோல, சர்வஞ்ஞத்துவ அபரோட்சத்துவாதிகளோடு கூடின சைதன்னிய வாச்சியார்த்த தற்பதார்த்தத்திற்கும் கிஞ்சிஞ்ஞத்துவ பரோட்சத்துவாதிகளோடு கூடின சைதன்னிய வாச்சியார்த்த துவம்பதத்திற்கும், ஒன்றிற்கொன்றிலுள்ள பேதத்தை விடுதலினாலே, அன்னியோன்னிய விசேடண விசேடிய பாவ சம்பந்தமுள்ளது. அவன் இவன் என்னும் பதங்கட்கும் அப்பதங்களினுடைய அர்த்தங்கட்கும் அகண்டார்த்தமான தேவதத்த பிண்டத்தை எடுத்துக்கொள்வதனாலே, விரோத அமிசங்களை விட்டு விரோதமில்லாத தேவதத்தன் என்னும் இலட்சியத்தை மாத்திரம் கிரகித்தலினாலே இலட்சிய இலட்சண பாவ சம்பந்தமுள்ளது. அதுபோல, தத் துவம்பதங்கட்கும் அப்பதங்களின் அர்த்தங்

கட்கும் அகண்ட சச்சிதாநந்தத்தை மாத்திரம் அங்கீகரிப்பதனுல், விரோத அமிசத்தை விட்டு விரோதமில்லாத அமிசமான சைதன்னியத்தைமாத்திரம் இலட்சியமாக எடுத்துக்கொள்வதனுலே, அதாவது சிவப்புப் பசுவிற்கும் கறுப்புப் பசுவிற்கும், சரீரங்களும் அவயவங்களும் குணங்களும் பேதங்களாயிருத்தலினுல் ஐக்கியம் எற்படாததினுலே, விரோத அமிசங்களை விட்டு, சிவப்புப் பசு, கறுப்புப் பசு இவற்றின் பாலில் விரோத அமிசங்கள் இல்லாததனுல் சமத்துவத்தைக் கிரகிப்பதுபோலத் தற்பத துவம்பதங்களுக்கு ஐக்கியத்தைக் கிரகித்தலினுலே, இலட்சிய இலட்சண பாவ சம்பந்தமுள்ளது. இந்த இலட்சிய இலட்சண பாவ சம்பந்தத்தையே விட்டும் விடாத இலட்சணையென்று சொல்லுவார்கள்.

இத்தகைய ஐக்கிய அனுசந்தான அனுபவத்தினுலே மாயாவரண நிவாரணமே மோட்சமென்பது தெற்றென விளங்கும். மாயையாவது அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத்தினுலேயே உலகத்தில் உயிர்களெல்லாவற்றிற்கும் அளவற்ற அநர்த்தங்கள் சம்பவிக்கின்றன. ஞான சூரியோதயமானுலல்லது மனதை மூடிக்கொண்டிருக்கும் அஞ்ஞான இருள் அழிவுருது. ஞானமாவது, சூரியனுக்கும் இருளுக்கும் ஓரிடத்தில் எப்படிச் சம்பந்தம் எற்படாதோ அப்படியே சித்துருவான புருடனுக்கும் சடவுருவான மாயைக்கும் சம்பந்த முண்டாகமாட்டாதென்று திடமாகத் தெரிந்துகொள்ளுதல். இந்த மாயையை நீக்கிப் பார்க்குமிடத்து, தானே பரப்பிரமமென்பது தெளிவாகும். இவ்விதமாகத் தன்னைப் பரப்பிரமமென்று தெரிந்துகொள்ளும் அறிவு இயற்கையேயன்றிப் புதிதாக உண்டானதன்று. உண்டானதானுல் அதற்குக் காலாந்தரத்தில் நாசமுண்டாகும்.

(வரும்.)

---

## நியாயமாலா.

### 2-வது சதகம்.

1. விருத்த குமாரிவா நியாயம்:— விருத்த குமாரி = பேரிளம் பெண், (கிழவி) வரம்=பெரியார் அல்லது தெய்வத்தினிடத்து வேண்டிப் பெறும் இஷ்டலாபம், நியாயம் = திருஷ்டாந்தம். இது ஒன்றன் பெறுதியால் பலவற்றின் பெறுதியுண்டாத விதுபோலவென்கின்றது. அதாவது: ஒரு விருத்தை இந்திரனை நோக்கித் தவம்புரிந்தனள். இந்திரன் பிரசன்னமாய் "யாது வேண்டும் கேள்" என்றனன். அக்கிழவி, "எனது பௌத்திரன் மேல்மாடியில் இரத்தின பாத்திரத்தில் பாலடிசில் உண்ணு

வதை யான் காணவேண்டும்" என்றனள். அங்ஙனமே பெற்றனள். இங்ஙனம் இவ்வொரு வரத்தால் அக்கிழவியானவள் இளமை, சந்ததிவிருத்தி, செல்வம், ஆயுள் ஆகிய பல வரங்களைப் பெற்றதுபோல வென்கின்றது.

2. சாணோல்லீடமணி நியாயம்:— சாணோல்லீடமணி = சாணைக் கல்லில் தேய்க்கப்பட்ட இரத்தினம், நியாயம் = திருஷ்டாந்தம். இது ஒரு வஸ்து ஒருவிதத்தில் குறைவுறினும் மற்றொருவிதத்தால் மிகப் பெரு மேன்மையுற லிதுபோலவென்கின்றது. அதாவது: இரத்தின மானது சாணையில் தேய்க்கப்பட்டபோது உருவத்தால் குறைவுறினும் ஒளியால் மேன்மையுறல்போல வென்கின்றது.

இதோபதேசி.

---

மகா-ா-ா-ஸ்ரீ

## "கலைமகள்" பத்திராதிபர் அவர்களுக்கு.

ஐயா,

அநல ஞு கார்த்திகை மீ அ-ம் வ அடித்த புயற்காற்றினால் ஜனங்களுக்கு நேர்ந்த கஷ்டங்களை இயன்ற அளவு நிவர்த்திக்கும் பொருட்டு நானும் எனது நண்பரும் வசூலித்த பணங்களுக்கும் அரிசிக்கும், செய்த செலவுகளுக்கும் ஒரு விவர ஜாபிதா வெளிப்படுத்தவேண்டியது கடமையாதலால் அடியில் கூறும் விவரங்களைத் தங்கள் அரிய பத்திரிகையில் வெளிப்படுத்த இடம் தரும்படி வேண்டுகிறேன்.

புதுவை
அநல ஞு கார்திகை மீ
உஎ-ம் வ

இங்ஙனம் தங்கள்
வ. வே. ஸு. அய்யர்.

நிகழும் அநல ஞு கார்த்திகை மீ அ-ம் வ இரவு அடித்த புயற்காற்றினால் நிலைகுலைந்துபோய்விட்ட ஏழை ஜனங்களுக்கு உதவி புரியும்படி அங்கங்கேயுள்ள கனவான்களை வேண்டினதில்,

க. அடியிற்கண்ட கனவான்கள் இந்தத் தர்மத்துக்காக அரிசி தந்தார்கள். அவரவர்கள் பெயருக்குப்பின் வருகிற இலக்கம் அவரவர்கள் புதுச்சேரிப்படியால் இத்தனைபடி தந்தார்கள் என்று குறிப்பிடுகிறது:— ஸ்ரீ ஸ்ரீ கலவை — சங்கரசெட்டியார் (நடு); சீகாழி கிருஷ்ணசுவாமி செட்டியார் (ருo); கிரந்தே — சிவசங்கரசெட்டியார் (கo); லூயி. சி. ஞானப்பிரகாசமுதலியார் (ருo); ஈப்பூர் — கிருஷ்ணசுவாமிசெட்டியார் (சரு); ராமகிருஷ்ணரெட்டியார் (ரு); போல்ஜி ராமேசுவர் ஸேட்(ரு); தாண்ட்லா கோவிந்தசெட்டியார் (உo); ஸ. ஆறுமுகம்செட்டியார் (கo); ராமகிருஷ்ணபிள்ளை (சo); சா. குப்புஸ்வாமி அய்யர் (கo); முத்துக்குமாரஸ்வாமி வசூல் (உச); சில்லரை வசூல் (கக).

௨. பெஸ்ட் சங்கத்துத் தலைமை குமாஸ்தா ஸ்ரீ குப்புஸ்வாமி முதலியார் ரூ. ௧௦ கொடுத்தார்.

௩. அடியிற்கண்ட கனவான்கள் ரூ. ௩ வீதம் கொடுத்தார்கள்:— ஸ்ரீ ஸ்ரீ பொன்னூர் கிருஷ்ணசுவாமிசெட்டியார்; கருணாநிதிப்பிள்ளை; குப்புஸ்வாமிபிள்ளை (பெருமாள்கோவில்தெரு).

௪. அடியிற்கண்ட கனவான்கள் ரூ. ௨ வீதம் கொடுத்தார்கள்:— ஸ்ரீ ஸ்ரீ எப்ராஹீம் ஈசாக் ஸேட்; கல்வெ – சுப்பராயசெட்டியார்; குட்டியா – சபாபதிபிள்ளை; தூ. சு. நன்னைய பாகவதர்; துரைப்பிள்ளை; ஸ்வாமிநாத தீக்ஷதர்; முனிசுவாமிபிள்ளை (முத்துமாரியம்மன்கோவில் தெரு); வேலாயுதநாய்க்கர்; சரவணசெட்டியார்.

௫. ஸ்ரீ ஜயராம்நாயடு வசூலித்தது. ரூ. ௨ – அ – ௬

௬. ஸ்ரீ முத்துக்குமாரஸ்வாமி வசூலித்தது. ரூ. ௧ – ௪ – ௦

௭. அடியிற்கண்ட கனவான்கள் ரூ. ௧ வீதம் கொடுத்தார்கள்:— ஸ்ரீ ஸ்ரீ வேலுஸ்வாமிபிள்ளை; வ. வெ. ஸு. அய்யர்; சி. ஸுப்ரம்ஹண்ய பாரதி; ஸ்ரீநிவாசாசாரியார்; நா. ஸுப்ரம்ஹண்ய அய்யர்; உலியே–ஷண்முகய்யர்; திருமுடி – நடராஜசெட்டியார்; நடேசய்யர்; சிட்டி–குப்புஸ்வாமி அய்யங்கார்; ஸுந்தர அய்யங்கார்; சிதம்பரம் அய்யர்; ஓர் பரோபகாரி; பத்மநாபரெட்டியார்; அமீனா – ரங்கசுவாமிபிள்ளை; நா. எதிராஜுலுநாயடு; பழக்கடை பொன்னுஸ்வாமிநாயகர்; ரத்தின – பெருமாள்பிள்ளை; மளிகை – வைத்தியலிங்கம்பிள்ளை; கு. ராமஸ்வாமி அய்யர்; அரிசிக்கிடங்கு ராமசுவாமிபிள்ளை; கோ. ஐயாசுவாமிசெட்டியார்; லோகநாதமுதலியார்; சுந்தரேசய்யர்; பர்மாலி – நடராஜபிள்ளை; அழாம் பெய்யேர் – ரங்கநாதமுதலியார்; கண்ட்ராக்ட் பெருமாள்பிள்ளை; சாராப் – வீரபத்திரபிள்ளை; சிற்றம்பலசெட்டியார்; துரைஸ்வாமிநாயடு; தண்டு – ராஜப்பிள்ளை; ரேவு – குழந்தைவேலுப்பிள்ளை; ஓவர்ஸீயர் ராமானுஜய்யங்கார்.

அ. அடியிற்கண்ட கனவான்கள் எட்டணா வீதம் கொடுத்தார்கள்:— ஸ்ரீ ஸ்ரீ விருபாக்ஷிசெட்டியார்; ராமசந்திர அய்யர்; வி. எஸ். வீரராகவாசாரியார்; எஸ். திருவேங்கடாசாரியார்; சவரிராஜய்யங்கார்; வேங்கடபதிநாயடு; தேவநாயகசெட்டியார்; சுப்பராயலுநாயடு; வடிவேலுப்பிள்ளை; ஒரு ஸேட்; தியாகராஜய்யர்; ஜவுளி – மாணிக்கசுவாமிபிள்ளை; எஸ். கே. ஸ்ரீநிவாசசெட்டியார்; அமீனா துரைசுவாமிபிள்ளை; நாராயணசுவாமிபிள்ளை; ராமகிருஷ்ணபிள்ளை; எஸ். தங்கவேலுப்பிள்ளை; கா. சோமசுந்தரம்பிள்ளை.

கூ. எட்டணுவுக்குக் கீழ்ப்பட்ட சில்லரையாக வந்தது. ரூ. ௪-௭-0

ஆக மொத்தம் வசூலித்தது அரிசி ௩௧௫ படி. ரூ. ௮௬-௩-௬

வசூல்செய்த ரூபாய்களின் செலவுக்கு விவரம்: புயற்காற்று அடித்த இரவுக்கு அடுத்தகாலமே முதல் கார்த்திகை மீ௳ ௧௮-ம் ௳ முடிய ௧0 நாட்கள் வரை நாளைக்கு ஏறத்தாழ ௪00 ஜனங்கள் வீதம் சுமார் ௪000 ஜனங்களுக்குக் கஞ்சி ஊற்றுவதற்கு, வசூலித்த அரிசி போக வாங்கின அரிசி. ரூ. ௪0-௧௨-0

| | |
|---|---|
| அதற்காகவேண்டிய இதர செலவுகள், ஆக்கும் கூலி, விறகு, மிளகாய் முதலியன உள்பட | ௨௨-௧௫-௧௧ |
| முதலியார்பள்ளத்தில் குடியிருக்கும் நிர்க்கதியாயுள்ள ஜனங்களுக்குக் குடிசை கட்டிக்கொள்ளவென்று ரூ. ௨, ௧, வீதம் கொடுத்ததில் மொத்தம் | ரூ. ௧௮-௬-0 |
| கஞ்சி ஊற்றுவது நின்ற பிறகு அப்போதைக்கப்போது வரும் ஏழைகளுக்குக் கொடுத்தது | ரூ. ௧-௫-0 |
| சாலையில் அழுகிப்போய் ஊருக்கு வியாதி உண்டு பண்ணிக்கொண்டிருந்த காக்கைகளில் ௭௬0 காக்கைகளை எடுத்துப்போட்டுப் புதைக்க | ரூ. ௨-௨-௭ |
| ஆக | ரூ. ௮௬-௩-௬ |

பணமும் அரிசியும் வசூல் செய்வதில் மிக்க உதவியாக இருந்த ஸ்ரீ ஸ்ரீ சிதம்பர அய்யர், சிட்டி — குப்புஸ்வாமி அய்யங்கார், சராப் — பராங்குசம்நாயகர் முதலிய சகல நண்பர்களுக்கும், கஞ்சி தயாரித்து ஊற்றும் சிரமமான காரியத்தை மிகச் சிரத்தையோடு கவனித்துவந்த ஸ்ரீ ஸ்ரீ முனிசுவாமிபிள்ளை, கோவிந்தராஜுலுநாயகர், நா. சுவாமிநாதய்யர், ஸ. நாராயணசுவாமி முதலியோருக்கும், இந்தத் தர்மத்தால் சுகமடைந்த ஜனங்கள் மிகக் கடப்பாடுடையவர்களாக இருக்கவேண்டும்.

வ. வே. ஸு. அய்யர்.